[Sri M. A. Manickavelu] [4th March 1958

4,939 primary vaccinations and 35,969 revaccinations have been done in the municipality and the work is still progressing. On account of the intensive measures taken the situation is under control now as no reports of cases have been received from the Nagercoil Municipality during the weeks ended 1st February 1958 and 8th February 1958.

As regards the smallpox situation in the other areas of the district only moderate infection has been noticed particularly in Thiruvithancode and Kulasekaram villages. There were 59 attacks and 16 deaths in the rural areas of the district during the period from 24th November 1957 to 1st February 1958, not 48 deaths as represented by the hon. Member. The District Health Officer visited the villages and contacted the public and persuaded them to get vaccinated. He has deputed three Health Assistants including one Lady Health Assistant for vaccination among the Muslims of the village. During the week ending 1st February 1958 there has been a good progress of vaccination work and the smallpox situation is rapidly improving. Intensive vaccination by house-to-house visits is being conducted. Up to the week ended 1st February 1958, 556 primary vaccinations and 8,961 revaccinations have been done. The District Health Officer is now camping at Nagercoil. He will visit the affected places and supervise control measures in and around Nagercoil. The situation is now well under control.

## III.—GENERAL DISCUSSION ON THE BUDGET FOR 1958–59.

MR. SPEAKER: We shall now continue the General Discussion on the Budget. I have already with me the names of 25 hon. Members wishing to speak today and many more may be coming. To be on the safe side, therefore, I am fixing a time-limit of 10 minutes for each hon. Member.

SRI J. MATHA GOWDER: கனம் சபாநாயகர் அவர்களே, கனம் நிதி அமைச்சர் அவர்களால் சமர்ப்பிக்கப்பட்டிருக்கும் 1958–59-வது ஆண்டு நிதி நிலை அறிக்கையை நான் மனமார வரவேற்கிறேன். சென்ற ஆண்டை விட இந்த ஆண்டு நல்லதொரு அறிக்கை இந்த சபையின் முன் சமர்ப்பிக்கப்பட்டிருக்கிறது. தான்யத்தைப் பொறுத்தவரையில் நம் மாகாணம் இதர மாகாணங்களை விட அதிகமான விளைச்சல் விளைந்திருக்கிறது என்பதை அவருடைய பட்ஜெட் உரையில் காண்பித்திருக்கிறார்கள். அதை நாம் மட்டும் சொல்லவில்லை. எதிர் கட்சியில் அமர்ந்திருக்கக் கூடிய அன்பர்களும் சொன்னார்கள், சென்ற ஆண்டில் படுத்துக் கொண்டிருந்தவள் இந்த ஆண்டு எழுந்து உட்கார்ந்திருக்கிறாள் என்று. அவர்கள் அப்படி ஒரு உண்மையை ஒரு வருடத்தில் சொல்லியிருக்கிறார்கள். அதற்கு நான் எனது மனமார்ந்த வந்தனத்தை தெரிவித்துக்கொள்கிறேன். இந்த ஆண்டு உட்கார்ந்து இருந்தால் அடுத்த ஆண்டு ஒருக்கால் எழுந்து ஓடும் அளவிற்கு வந்துவிடும் என்ற நிலையை அவர்கள் நன்கு புரிந்து கொள்ளவேண்டும். அவர்கள் எப்பொழுதும் குறுகிய மனப்பான்மையோடு இருப்பது தவிர அந்த மனப்பான்மையில்தான், அந்த வழியில்தான் அவர்கள் மக்களை இழுத்துச் செல்லப் பார்க்கிறார்கள்.

4th March 1958] [Sri J. Matha Gowder]

ஓடுவது என்று நான் சொல்வது, உற்சாகத்துடனும், வேகத்துடனும் காரியங்கள் செய்யப்படும் என்று நான் சொல்கிறேனே தவிர வேறு ஒரு அர்த்தத்திலும் அதைப் புரிந்து கொள்ளவேண்டாம். அதே நேரத்தில், இந்த அறிக்கை, நிதியமைச்சர் அவர்களால் சமர்ப்பிக்கப்பட்டிருக்கும் அறிக்கை நல்ல முறையில் அமைந்திருக்கிறதா இல்லையா என்று பரிசீலனை செய்து பார்த்து அதில் ஏதாவது குறைகள் இருந்தால் அதை எடுத்துச் சொல்ல வேண்டுமே தவிர, ஏதாவது சாக்கை வைத்துக் கொண்டு ஆளும் கட்சியினரை குறை சொல்ல, அதில் பொத்தல் எதுவும் கண்டுபிடிக்க முடியாவிட்டாலும், அதை மனதிலே வைத்துக்கொண்டு பேசுவதற்காக இங்கு வந்து உட்கார்ந்து கொண்டு பேசினால் அதனால் ஒருவித நன்மையும் ஏற்படப் போவதில்லை. அதனால் குழப்பந்தான் அதிகமாகும். நாம் பத்திரிகையில் பார்த்திருக்கிறோம், சிலோனையும் சேர்த்து ஒரு சுதந்திர தமிழ் நாடு அமைக்க வேண்டுமென்று ஸ்ரீ ஆதித்தன் அவர்கள் ஒரு கட்சி ஏற்படுத்தியிருப்பதை. அதைப்பற்றி நேற்றைய விவாதத்தில் இலங்கை வாழ் தமிழர்களைப்பற்றி இங்குள்ள தமிழர்கள் ஏதோ பகை காட்டுவது போல் பேசியிருக்கிறார்கள். ஆதித்தன் அவர்களால் ஏற்படுத்தப்பட்டிருக்கும் இந்தக் கட்சியால் சிலோனில் உள்ள தமிழர்களுக்கு பாதகம் விளையுமே தவிர அதனால் அவர்களுக்கு நன்மை ஏற்படப் போவதில்லை. அதனால் அங்குள்ள தமிழர்களுக்கு தீங்குதான் விளையும் என்பதை அவர் மறந்து விட்டார் என்று தோன்றுகிறது. இலங்கையில் ஒரு அன்னிய சர்க்கார் இருக்கும்போது, அச் சர்க்கார் என்ன நினைக்கும் ? தமிழர்களை இங்கு அதிகமாக குடியேற்றினால் பூரா இலங்கையும் அவர்கள் கேட்பார்களோ அல்லது இலங்கையை அவர்கள் பிடித்து விடுவார்களோ என்ற தப்பு அபிப்பிராயம் ஏற்பட்டு அவர்கள் அங்குள்ள தமிழர்களை இம்சிப்பார்களே தவிர அதனால் அங்குள்ள தமிழர்களுக்கு நல்லது கிடைக்காது அவர்களது கட்சியால். ஒரு சிலோன் பத்திரிகையில் அதைப்பற்றி போடப்பட்டிருக்கிறது. அதனால் நமது இந்திய சர்க்கார் மீதும் அவர்கள் கண்டனம் தெரிவித்திருக்கிறார்கள். அதற்கு நம் பிரதமர் நேருஜி அவர்கள் மறுப்பு கொடுத்திருக்கிறார்கள். இருந்தாலும்கூட அவ்வளவு தூரம் பத்திரிகையில் எழுதும்படி வந்து விட்டதற்குக் காரணம் ஆதித்தன் அவர்களைப் போன்றவர்களாகும். நல்ல காலமாக அவர் அந்த பத்திரிகையில் இருந்து விலகி விட்டதாக பத்திரிகையில் பார்த்தேன். மிகவும் சந்தோஷம். அதே போல் இந்த சுதந்திர தமிழ் நாடு கட்சியில் இருந்தும் ஆதித்தன் அவர்கள் நாளையோ அதற்கு அடுத்த நாளோ விலகிக் கொள்வார் என்று நான் எதிர்பார்க்கிறேன். அதே போல்தான் வடநாடும் தென்னாடும். இந்த வடநாட்டான், தென்னாட்டான் என்று பேசுவதும் அப்படித்தான். இன்று சிலோனில் தமிழர்களுக்கு ஏற்பட்டிருக்கும் தொல்லை வடநாட்டில் இன்று இருக்கும் தமிழர்களுக்கு ஏன் ஏற்படக் கூடாது ? அதை அவர்கள் புரிந்து கொள்ளவேண்டும். அது மாதிரி செய்ய அந்தந்த மாகாண சர்க்கார்களுக்கு இடம் கொடுக்காமல் மத்திய சர்க்கார் தன் கண்ட்ரோலில் வைத்திருப்பதால் பிற மாகாணங்களில் வசிக்கும் தமிழர்கள் தொல்லைப் படாமல் இருக்கிறார்களே தவிர நம் போன்று அவர்களுக்கும் குறுகிய மனப்பான்மை இருக்குமானால் மாகாணத்திற்கு மாகாணம் பிரிவினை வேண்டுமென்று கேட்கும் நிலை இருந்தால், இன்று நாம் பம்பாய் நகரத்தை எடுத்துக் கொண்டால் மாதுங்காவில் ஆயிரக்கணக்கான தமிழர்கள் அங்கு இருக்கிறார்கள். ஆகவே, அங்குள்ள தமிழர்களுக்கு இங்கு இவர்கள் போடும் கூக்குரலும், கூச்சலும் தீங்கு விளைவிக்குமே தவிர அங்கு இருக்கும் தமிழர்களுக்கு அதனால் என்ன விதமான சாதகமும் ஏற்படாது என்பதை நாம் பட்டவர்த்தனமாக தெரிந்துகொள்ள வேண்டும். நாம் தனி தமிழ் நாடு வேண்டும் என்றெல்லாம் பேசிக் கொண்டுபோனால் அகில இந்தியாவில் உள்ள தமிழர்களின் நிலை என்னவாகும் என்று பார்க்கவேண்டும். என் தாய்மொழி கன்னடமாக இருந்தாலும் கூட தமிழர்களின் வீரப் பண்பாடு சேர சோழ பாண்டியன் வரலாற்றை படித்திருப்பதால் நாங்கள் எல்லோரும் தமிழ் நாட்டில் இருக்க வேண்டுமென்று விரும்பி இங்கு இருக்கிறோம். ஆனால் தமிழர்கள் இந்த மாதிரி பிரிவினை மனப்பான்மையை தொடர்ந்து வைத்துக்கொண்டிருந்தால், எல்லோரும் இங்கிருந்து பிரிந்து போகப் பார்ப்பார்களே தவிர, அப்படிப்பட்ட பிரிவினைக் கைங்கரியத்தால் நீங்கள் பெருமை அடைந்துவிட

[Sri J. Matha Gowder] [4th March 1958

முடியாது. அதனுல்தான் ஆதித்தன் அவர்கள் சொன்னதை நேருஜி அவர்கள் நான்சென்ஸ் என்று சொன்ஞர்கள். நான்சென்ஸ் என்ற வார்த்தையை கன்ஷிலியேஷன் போதெல்லாம், தொழிற்சங்கத் தலைவர் களும், முதலாளிகளும் சர்வ சாதாரணமாக பரிமாறிக்கொள்கிறோம். நான்சென்ஸ் என்று சொல்வது நான்சென்ஸ்ஸான காரியங்களைக் குறிக் குமே தவிர அந்த ஆளை குறிக்காது. தமிழர்களுக்கு பாதகமான செயல்களை செய்யும்போது அல்லது செய்ய வேண்டுமென்று சொல்லும்போது அந்த பாதகமான காரியங்களைத்தான் நான்சென்ஸ் என்று சொல்கிறார் களே தவிர தமிழனைச் சொல்லவில்லை. அதேபோல் மொழிப் பிரச்னை. இந்தி மொழி வட மொழி, அதை தென்னுட்டில் உள்ள தமிழர்கள் ஆதரிக்கிறார்களே, காங்கிரஸ்காரர்கள் ஆதரிக்கிறார்களே என்று சொன்னால் அகில இந்தியாவிற்கு ஒரு பொது மொழி வேண்டுமென்றுதான் அதை ஆதரிக்கிறோமே தவிர வட மொழி ஒன்றை வளர்க்க வேண்டுமென்ற குறிக்கோளோடு அல்ல. அதே நேரத்தில் வட மொழி வைப்பதை எதிர்க்கும் திராவிட முன்னேற்றக் கழகத்தினர் அவர்களது தேர்தல் சின்னமாக வைத்துக் கொண்டிருந்தது, உதய சூரியனையாகும். உதய சூரியன் என்ற சொல் வட மொழிச் சொல்லாகும். அதற்கு தமிழில், ஆதவன், ஞாயிறு என்று சொல்லலாம். அப்படி அவர்கள் வைத்துக்கொண்டு, வட மொழியை ஆதரிக்கிறீர்களே என்று எங்களைப் பார்த்து சொல்கிறார்கள். இவ்வளவு தமிழ் அறிவும் எப்படி வந்தது என்றால் தமிழர்களோடு பழகிய தோஷத்தால் வந்ததுதான், என்பதையும் சொல்லிக்கொள்கிறேன். நான் தமிழைப்பற்றி தப்பாக பேசினாலும் கூட அது தவறு கிடையாது. இன்றைக்கு வடமொழி வேண்டாம் என்று சொல்லுகிறவர்கள் உதய சூரியன் என்று வடமொழி பெயரை வைத்திருக்கிறார்கள். இன்றைக்கு பத்திரிகையில் பார்த்தேன், அவர்கள் ஏதோ அவர்களது தேர்தல் சின் னத்தை அடுத்த தேர்தலில் மாற்றப் போவதாக இருக்கிறது. இவர்கள் எல்லாம் நாம் சொன்ன பிறகுதான் இதைக் கண்டு பிடித்திருக்கிறார்கள். அவர்கள் எல்லாம் இவ்வளவு நாட்களும் தெரியாமலே வட மொழியை வளர்த்துக்கொண்டு வந்திருக்கிறார்கள். அதைப் பார்த்து நான் பரிதாபப் படுகிறேன். ஆனால் இவர்கள் இன்று தமிழ்நாட்டை பிடித்துக் கட்டு வதற்காக இங்கு வந்திருக்கிறோம், என்றைக்கும் நாங்கள் எதிர் கட்சியில் இருப்பதற்கு வரவில்லை, ஆளும் கட்சியாக வருவதற்குதான் இங்கு வந்திருக்கிறோம் என்றும் சொல்லுகிறார்கள். ஆனால் இங்குதான் தமிழ் நாட்டை பிடிப்பதற்காக வந்திருக்கிறார்கள், டில்லியில் பார்லிமெண்டில் எதற்காக திராவிட முன்னேற்ற கழகத்தின் அங்கத்தினர் இருக்கிறார் என்று தெரியவில்லை. அவர்கள் பார்லிமெண்டில் உட்கார்ந்து இருப்பது ஹிமாலய மலையை பிடிப்பதற்குத்தான் போய் இருக்கிறார்களோ என்னவோ தெரியவில்லை. ஹிமயமலை முதல் குமரி வரை கட்டிப் பிடிப்போம் என்று சொல்லுகிறார்களோ என்னவோ தெரியவில்லை. குமரி நமக்கு கிடைத் திருக்கிறது. ஆனால் இமயத்தை நாம் ஒருக்காலும் பெற்றுக்கொள்ள முடியாது. இதோ இவர்கள் இமயத்தை பிடிப்பதற்கு அவர்களுடைய அங்கத்தினரை பார்லிமெண்டுக்கு அனுப்பியிருக்கிறார்கள் என்று நம்பு கிறேன். இதே மாதிரி பிளவு மனப்பான்மையில் போய்க் கொண்டிருந்தால் ஒரு காலத்திலும் தெலுங்கர்களும், கன்னடர்களும், மலையாளிகளும் ஒற்றுமையாக வாழ முடியாது என்பதை நாம் கண்கூடாக பார்த்துக் கொண்டு வருகிறோம். அதல்லாமல் இவ்விதம் சொல்லிக் கொண்டிருப்பது வெறும் பிரசாரத்திற்குத்தான் உதவுமே தவிர பலன் ஒன்றுமில்லை என்பதை சொல்லிக்கொள்கிறேன். இவர்கள் அடுத்த தேர்தலில் ஏதோ தங்களுடைய சின்னத்தை மாற்றப் போவதாக சொல்லியிருக்கிறார்கள். சில வேளை இவர்கள் தங்களுடைய சின்னமாக "காக்காய்" சின்னத்தை வைத்துக்கொண்டால் நல்லதாக இருக்கும் என்று சொல்லிக்கொள்ள ஆசைப்படுகிறேன். ஏனென்றால் இவர்கள் எப்பொழுதும் கருப்பு சின்னத்தில் அதிக நம்பிக்கை உடையவர்களாதலால் அதை வைத்துக்கொள்வது பொருத்தமாக இருக்கும் என்று நம்புகிறேன். . . .

2 p.m.

**Mr. SPEAKER** : The hon. Member has exceeded his time-limit.

4th March 1958].

SRI J. MATHA GOWDER : இந்த பட்ஜெட் உரையில் பஸ் வாங்குவதற்காக 35 லட்சம் ரூபாய் ஒதுக்கி யிருக்கிறார்கள். இந்த 35 லட்சம் ரூபாய்கள் சமீபத்தில் தீக்கிரையாக்கப்பட்ட ஐந்து பஸ்களையும் சேர்த்து வாங்குவதற்காகவா என்று தெரியவில்லை. இவ்விதம் பஸ்களை தீக்கிரை யாக்கிக் கொண்டிருந்தால் இம்மாதிரிதான் டெபிஸிட் வந்து சேரும். சர்க்காருடைய முதலை இவ்விதம் நாசமாக்கிக் கொண்டிருக்கிறார்கள். இதை சர்க்கார் அனுமதிக்கக் கூடாது. சமீபத்தில் ஐந்து பஸ்கள் தீக்கிரையாக்கப்பட் டுஅதனால் ஆறு லட்சம் ரூபாய் நஷ்டமடைந்திருக்கிறோம். இந்த மாதிரியான காரியங்களில் மக்களை தூண்டிவிடக் கூடாது என்று கேட்டுக்கொண்டு என்னுடைய வார்த்தைகளை முடித்துக்கொள்கிறேன்.

* SRI R. SRINIVASA IYER : Mr. Speaker, Sir, I welcome this Budget which has been very carefully prepared and it is a balanced Budget not in consonance with the deficit Budgets of the Centre or some other States. Perhaps this is done due to instructions that all States will do well to prepare balanced Budgets. On the whole, if the Press represents public opinion, it has been received as satisfactory except for some remarks which have been made with reference to the taxes that are proposed to be levied. Sir, all sections of the House have generally received this Budget as satisfactory except the Opposition Members who have criticized it for the sake of criticism by repeating their slogans about ceilings, unemployment and so on. One important matter in this Budget stands singularly supreme and that is the substantial improvement in our Revenue position which has enabled us to wipe out the heavy deficit for the current year and reduce the gap for the next year, 1958–59.

Sir, the deficit of Rs. 105 lakhs has been worked out. I am guardedly using the words ' worked out ' because in some items though the Hon. Minister for Finance has taken up the actuals for 1956–57 or the revised estimates for 1957–58 into account, in some other items he has worked out less figures. I particularly refer to the figures under ' Excise, Forest and General Sales Tax '. Under ' General Sales Tax ' alone, about Rs. 188 lakhs less is taken into account. That is why there is a deficit. Dr. Loganathan has submitted in his report that they would get something more under this item. At any rate, there is no justification for taking a lesser amount and especially to reduce the total receipts by such a large sum as Rs. 188 lakhs.

Another important factor is that under the receipts from ' Community Development ' Rs. 73·49 lakhs less is taken into account. Under ' Forests ' sale of sandalwood has not been taken into account fully and a lesser figure is shown. Anyway, I am not a financial expert and it is not possible to estimate the revenue correctly but I do not find any explanation for showing a lesser amount under ' General Sales Tax ' in the Budget Memorandum.

THE HON. SRI C. SUBRAMANIAM : We have abolished the Sales Tax on tobacco, sugar and cloth and so that would not be found there.

SRI R. SRINIVASA IYER: I take that also into account. But yet I say that the Centre has agreed to give us compensation for the loss on that account and that is also found in the Budget Memorandum. As there is very little time I will rush up a bit.

To make up the deficit of Rs. 105 lakhs there is a proposal to levy Agricultural income-tax. When the surcharge was levied in 1954 it was stated that it was an immediate step as a substitute for agricultural income-tax. That could be continued instead of this agricultural income-tax. Sir, the ground for not levying agricultural income-tax is the impossibility of maintaining accounts. Also the manner in which the tax is proposed to be levied is not proper. The rate perhaps is very high. It is impossible to maintain accounts and that is found on page 208 of Volume III of Taxation Enquiry Committee's Report and also in the Memorandum submitted by the Madras Government to the Finance Commission.

Then coming to the right of the landowner to commute his income with the officers, I submit that it will give room for evasion and corruption. I feel that additional taxation is not necessary and especially agricultural income-tax is necessary. It is not proper to overload the already overloaded land. The landholders have been singled out for several piecemeal legislations and harassment. In this connection, I would also use the word '*Chitravathai*' used by the hon. Member, Sri Vedaratnam Pillai for the meaning of harassment. The landholders will be very much satisfied if a ceiling is fixed on their holdings and immediately the surplus lands are taken away by giving some proper compensation. Of course, in this respect, I would suggest that there is no constructive proposal from the Opposition, whether the ceiling on land holdings should be based on the total income or on the net income or on land revenue alone. Some judicious, some just ceiling must be fixed immediately so that the landholders may be relieved of their worry about ceiling. They would very much like that this is brought about as quickly as possible.

Another feature of this tax is that non-agricultural income is also taken into account for levying agricultural income-tax. Of course, exemption is given up to Rs. 3,000. In the Travancore State the exemption was up to Rs. 3,000 in 1946 when the prices were low and in the Hyderabad State it was Rs. 10,000 in 1952 when the prices were high. Therefore, I feel that the clubbing of the non-agricultural income along with agricultural income would cause hardship even to small landowners. For instance, take the Non-Gazetted Officer. He will be earning Rs. 150 per month and it would give him an annual income of Rs. 1,800. If he also possesses five acres of land, he will get an annual income of Rs. 1,500 or Rs. 2,000. As the exemption is only up to Rs. 3,000 he is also liable to pay agricultural income-tax at the top rate. Therefore, I feel that this sort of combining the non-agricultural income with the agricultural income will create difficulties even for the small landowners who will have to maintain accounts about non-agricultural income also.

4th March 1958] [Sri R. Srinivasa Iyer.]

2–10 p.m.

And then there is room for evasion and curruption. Unless a taxation proposal is easy of calculation, it will give room for evasions. We know that in Income-tax collection, crores of rupees are evaded. There is the surcharge of 1954 and also again the surcharge of 1955. The surcharge of As. 4 in the rupee is not going to be given up. There is no reasons at all for levying a fresh tax now. Even if it is necessary to impose a tax, even if the overburdened land should be taxed again, the surcharge could be increased to 2½ annas or 3 annas, per rupee on all ryotwari assessment giving up the As. 4 surcharge of 1954. Levy of Agricultural Income-tax will also affect food production adversely. I therefore suggest that for balancing of the budget which is not necessary and even if it was necessary, measures may be taken up in that way rather than taxing the agricultural income.

Then, this surcharge on land and this agricultural income-tax is likely to affect food production also. Whether this will affect food production or not is a question on which there may be differences of opinion and there is difference of opinion as to whether bringing of ceiling will increase or will not increase food production and expert people have not been able to solve it. But adding more burden to land which is already overburdened, I respectfully submit will retard production.

Then, the levy of additional As. 4 per gallon of Diesel oil is also likely to affect the agriculturists, in respect of pump-sets which they are using. A method must be evolved for exempting oil being purchased for agricultural pump-sets. Of course, there is also talk that the lorry owners who have been competing with the railway in relieving burden on railways would be affected. But so far as the agriculturists are concerned, the additional levy should be made not applicable to them and they should be exempted.

Provision has been made in the Budget for various other things and among them I welcome the proposals relating to minor irrigation, roads, education, etc. At the same time I would suggest that the poor village officer on whom we depend for our accounts, which form the basis for our revenues, is not properly paid and that should be considered. In computing the land revenue either according to inams, or taken-over estates or ryotwari estates, he has to maintain all the accounts. We have to depend upon him for computation of our land revenue. For all statistics, we have to depend upon him. With so much heavy work, his low pay should be compared and his condition should be improved. Even this morning reference was made about the incorrect statistics upon which we based our calculations of production of food crops, etc.

Minor irrigation is a very important matter. The sum of Rs. 70 lakhs set apart for minor irrigation is not enough. Several tanks in the upland regions of Aranthangi taluk and Pattukottai taluk have to be renovated. Many estates have been taken over and they are all Government property and in those estates tanks have to be immediately repaired if food production has got to be

increased. I thank the Government for having sanctioned the Ambuliar anicut which is going to function very soon. It will help about 4,000 acres of new land to be brought under irrigation. Aranthangi taluk is an area of deficiency which consists of only chains of tanks which have to be repaired—and this applies to all tanks which have been taken over from Zamins and inams. Water has to be regulated, and, for want of this arrangement large extent of land are suffering now.

A word about electricity. I would suggest that in the Budget Receipts and Expenditure on Electricity has been omitted on the ground that it is now administered by a Board. I respectfully submit that the Board being a limb of the Government, the Government are responsible for whatever work is carried on by the Board. We must be, therefore, given an opportunity to discuss the demand and expenditure, under this head. The House is entitled to know what the receipts are and what are the projects, what we can expect from electricity schemes, etc. Of course, I congratulate the Hon. Minister for Electricity on having brought 900 villages out of a targent of 1,000 villages under electricity schemes, even by December 1957. I know the Hon. Minister for Electricity is taking effective steps to provide electricity to villages. In this connection I wish to say a word about the minimum charges. A fixed rate of Rs. 50 or 60 horse power works hardship in villages and therefore this minimum charge should go. If we estimate the cost of electricity production to a particular village, it is more. I submit that this cost of production of electricity and the whole system of distribution of electricity for the whole State should be taken together just as we do in Railways. We should not single out one particular scheme as costing Rs. 220 lakhs and therefore, the minimum charge must be so much per cent of it. If we are interested in the increased production of food crops, then this system must be removed so as to help the agriculturists who are not able to use the minimum quantity of electricity. Another thing is that electricity is a commodity which is not wasted. If you do not use it in a particular place, it is consumed in another place. We have to re-arrange rates for consumption of electricity so that this cut will not be imposed in future.

I am happy that excellent work has been done in the field of agriculture, that is, by supplying improved seeds, distribution of manure, pesticides, etc., and I can visualise the increased production because of all this. I see increased production in my district. But the prices are going very high and I put it as due to the 'exodus' or illicit export through roads and railways to Kerala and outside. (Deputy Speaker sounded the gong.) I will finish in two minutes, Sir. Because other States like Kerala are taking away large quantities of our foodstuffs by roads, etc. Prices increase in our State.

In the field of Animal Husbandry, we have made great strides. We are proud that the best animals are reared here and so far as Sindhi and Murra are concerned, we can even compete with

4th March 1958] [Sri R. Srinivasa Iyer,]

places which are their native places. I am glad that Tanjore District which is the best agricultural district in the State is having a Livestock Farm and it is making great strides. I appeal to the Hon. Minister for Agriculture to acquire the 3,000 acres of Poramboke lands in Eachanthottam and the neighbourhood which can be made into the largest farm in the whole of India and it will be a great asset to the country and to our State economy.

One more word about roads. I want to submit that we are conferring benefit after benefit upon the same places and on Cities and Municipalities. If we want to improve the economic condition of the rural areas, if we want to eradicate this unemployment problem in the villages, then proper roads should be provided and it should be made easy for the products of the village to find an easy market outside. There are villages even without roads and even if there are roads, they are without gravel. Unless we improve the traffic conditions, the foodgrains produced in the villages cannot reach the big markets, the best markets and the economic conditions of our villages will not improve. There is the slogan 'begin improvement in the villages', but it is not carried out at all. I therefore appeal to the Government to begin from the villages and see that every village is provided with roads and that the roads are gravelled and all the rivers and channels that are unbridged are bridged. It is a great hardship for the village animals to drag their loads in bad roads and it is an abominable sight. Therefore, I appeal to the Government to see that all villages are connected by roads and that all roads are gravelled so that the village products could reach the nearest market easily. Thank you, Sir.

2-20 p.m.

SRI K. RAMACHANDRAN : கனம் சபாநாயகர் அவர்களே, நிதி அமைச்சர் அவர்கள் சமர்ப்பித்திருக்கும் இந்த பட்ஜெட்டின் மீது சில கருத்துக்களைச் சொல்ல ஆசைப்படுகிறேன். முதலில், இந்த பட்ஜெட்டைப் பொறுத்த வரையில் இது சம்பிரதாயமாக சமர்ப்பிக்கப்பட்ட ஒரு பட்ஜெட் என்றுதான் நான் கருதுகிறேன். இதிலே புதிதான விஷயம் எதுவும் சொல்லப்படவில்லை. ஆகையால் இதை நாம் பாராட்டக் கூடிய நிலையில் இல்லை என்று சொல்ல விரும்புகிறேன். பட்ஜெட் உரையின் ஆரம்பித்திலேயே சில முரண்பாடுகள் தெரிகின்றன. மழை திருப்திகரமாக இருந்தது, விளைச்சல் திருப்திகரமாக இருந்தது என்று சொல்லப்பட்டிருக்கிறது. ஆனாலும் உணவுப் பொருள்களின் விலைவாசிகள் ஏறுமுகமாகவே இருந்தது என்று சொல்லப்படுகிறது. **1956**-ம் ஆண்டு ஜூலை மாதத்தில் **377** ஆக இருந்த குறியீட்டு எண், **1957** டிசம்பரில் **512** ஆக ஏறியிருக்கிறது. இதிலிருந்து விலைவாசி குறையவில்லை என்ற விவரம் தெரிகிறது. மக்களுடைய பொருளாதாரம் திருப்திகரமாகயிருக்கிறது என்றால் விலைவாசிகள் இறங்க வேண்டும். உணவுப் பொருள்களின் விலைவாசிகள் இறங்காமல் அதிகரித்திருக்கிறதென்றால், மற்ற பொருள்களின் விலைவாசியும் அதிகமாகத்தான் இருக்கும். இந்த அதிக விலைவாசியினால் விவசாயிகளுக்கு ஏதாவது நன்மை ஏற்பட்டிருக்கிறதா என்று பார்ப்போமேயானால் உண்மை தெரியவரும். கிராமாந்திரங்களிலுள்ள கிராமவாசிகளுக்கு இந்த விலைவாசியினால் ஒரு நன்மையும் ஏற்படவில்லை. பெரிய முதலாளிகளும் வியாபாரிகளும்தான் நன்மை அடைந்திருக்கிறார்கள். கிராம விவசாயிகள் கடன் வாங்கி வரி கட்ட வேண்டிய நிலைமை ஏற்பட்டிருக்கிறது. குறைந்த விலைக்கு தான்யங்களை விற்க வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டிருக்கிறது. ஆகவே பெரிய வியாபாரிகள், முதலாளிகள் நலனைக்

[Sri K. Ramachandran] [4th March 1958]

கருத்தில் கொள்ளாமல், விவசாயிகளின் உண்மையான நலன்களைக் கருத்தில் கொண்டு விலைவாசியை நிர்ணயிக்க வேண்டும். மார்க்கெட்டிங் சொஸைட்டிகள் மூலமாக இந்தப் பொருள்களைக் கொள்முதல் செய்தால், விவசாயிகளுக்கு நல்ல விலை கிடைக்கும். விலைவாசிகள் அதிகமாகாத முறையிலும் சர்க்கார் **" price structure "** திட்டத்தை வகுக்கலாம். ஆகவே இதைப் பரிசீலனை செய்து தகுந்த நடவடிக்கை எடுக்கவேண்டு மென்று கேட்டுக்கொள்கிறேன்.

விளைச்சலைப் பொறுத்த வரையில் **1955–56**-ல் உணவு உற்பத்தி **44** லட்சம் டன்னாக உயர்ந்தது. **1956–57**-ல் இரண்டு லட்சம் டன் அதிக மாகி **46** லட்சம் டன் ஆக உயர்ந்திருக்கிறது. உயர்தர ரக விதைகள், நல்ல உரங்கள், இவைகளுக்காக அதிகமாகப் பணம் செலவழித்தும் கூட, கிட்டத்தட்ட ஐந்து சத விகிதம்தான் உயர்ந்திருக்கிறது. இதற்கு ஒரு உதாரணமாக, நிதி அமைச்சர் அவர்கள் பட்ஜெட் உரையில், " சீன நாட்டிலுள்ள நிலைமை அநேகமாய் நம் நாட்டு நிலைமையைப் போன்றது தான் " என்று சொல்லியிருக்கிறார்கள். உற்பத்தியைப் பெருக்குவதற்கு கையாளப்பட்ட முறைகள் நம் நாட்டைவிட சீன நாட்டில் நல்ல விதமாக இருக்கின்றன என்பது அந்த நாட்டில் வகுக்கப்பட்ட ஐந்தாண்டுத் திட் டத்தைப் பார்த்தால் தெரியும். அங்கேயும் அபிவிருத்தி செய்யப்பட்ட விதைகள், உர வகைகள் எல்லாம் இருக்கத்தான் செய்கின்றன. ஆனால் இவைகளுக்கு இரண்டாவது இடம்தான் கொடுக்கப்பட்டிருக்கிறது. முக்கிய மாக, கூட்டுறவு விவசாய முறையை அங்கே கையாண்டுகொண்டு வருகிறார்கள். இதனால் முதல் வருஷத்திலேயே **10**-லிருந்து **20** சத விகிதம் வரை விளைச்சல் அதிகமாகியிருக்கிறது என்பது அங்கே உள்ள புள்ளி விவரங்களிலிருந்து தெரியும். இந்த பட்ஜெட் உரையில் அந்த முறையை இங்கு கையாளுவதாக சூசகம் எதுவும் இல்லை. கூட்டுறவு விவசாய முறையைக் கொண்டுவந்தால்தான் இங்கும் அதிகமான விளைச்சலை எதிர் பார்க்க முடியும். நாற்பத்தெட்டு லட்சம் டன் நமக்கு உணவுப் பொருள்கள் தேவைப்படுகிறது என்றால், நல்ல முறையில் **" Co-operative farming "** திட்டத்தை கையாண்டால், விளைச்சல் பெருகி, வெளிநாடு களுக்கும் நாம் அனுப்பி நல்ல லாபம் பெற முடியும். ஆகவே அந்த முறையை நம் மாகாணத்திலும் பின்பற்றுமாறு கேட்டுக்கொள்கிறேன்.

அடுத்தபடியாக, நீர்ப்பாசனத் திட்டங்களுக்காக ஒதுக்கியிருக்கும் பணம் போதாது என்றுதான் சொல்லவேண்டியிருக்கிறது. ஸ்ரீ ஸ்ரீனிவாச அய்யர் எடுத்துக் காட்டியது போல் ராமநாதபுரம் ஜில்லா போன்ற ஜமீன் பிர தேசங்களில் இருக்கும் கண்மாய்கள் சரியாக பழுது பார்க்கப்படவில்லை. முக்கியமாக அவைகளுக்குச் செல்லக்கூடிய கால்வாய்கள் தூர்ந்து போய்க் கிடக்கின்றன. கண்மாய்கள் ஓரளவு பழுது பார்க்கப்பட்டு இருந்தாலும், கால்வாய்கள் சரியான முறையில் இல்லாததனால், தண்ணீர் சரியாகப் பாயக்கூடிய நிலைமையில் இல்லை. அதனால் சரியான விளைச்சலை எதிர் பார்க்க முடியவில்லை. ஆகையால், வைகை நதி பாய்கின்ற ராமநாதபுரம் ஜில்லாப் பகுதிகளுக்கு, ஆற்றங்கரையிலுள்ள கிராமங்களுக்காவது இந்தத் தண்ணீரால் பயன் கிட்டுவதற்கு ஒரு திட்டம் வகுக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

தேசீய நலப் பரப்புத் திட்டத்தை கிராம அடிப்படையில் கொண்டு வர நமது சர்க்கார் திட்டமிட்டிருக்கிறார்கள். இந்தத் திட்டத்தைப் பொறுத்தவரையில், அபிவிருத்தியே அடையாத பகுதிகளை எடுத்துக் கொண்டு திட்ட வேலையை நடத்துவதுதான் நியாயம். அந்த மாதிரி முறை இப்பொழுது இல்லை யென்றாலும், இனிமேலாவது ராமநாதபுரம் ஜில்லாப்போன்ற பிற்பட்ட பகுதிகளை எடுத்துக்கொள்ளலாம். ஐந்து, ஆறு தாலூக்காக்களில் பல அபிவிருத்தித் திட்ட பிளாக்குகள் எடுத்துக் கொள்ளப்படாமல் இருக்கின்றன. திருவாடானையில் சமீபத்தில் தேர்தல் வரவிருக்கிறது. அங்கே மந்திரிகளும் போவார்கள். அப்பொழுதுதான் அங்கேயுள்ள பிற்போக்கான நிலைமை விளங்கும். அங்கே சரியான ரோடு வசதிகள் கிடையாது. மிகவும் பிற்போக்கான பிரதேசம் என்பதை வற்புறுத்திச் சொல்ல விரும்புகிறேன். கிராமப் புறங்களிலிருந்து **40, 50** மைல்களுக்கு ரோடு வசதியே கிடையாது. இது நமக்குப் பெருமை

அளிக்கக் கூடியதல்ல. சாதாரணமாக ராமநாதபுரம் ஜில்லாவைப் பற்றிச் சொன்னுல், " உங்களுக்கென்ன, முதல் மந்திரி யிருக்கிருர்களே " என்று எல்லோரும் சொல்லுகிருர்கள். அவர்களுக்கெல்லாம், " எங்களுக்கு முதன் மந்திரி வேண்டாம், அபிவிருத்திதான் வேண்டும் " என்று நான் தமாஷாகச் சொல்லுவதுண்டு. (சிரிப்பு.) ஆகவே, இந்த மாதிரி பிற்போக்கான பகுதிகளுக்கு தேசிய நலப் பரப்புத் திட்டத்தைக்கொண்டுவர வேண்டும். தவிரவும், செலவாகிற பணத்தில் அதிகமாக " waste " ஏற்படுகிறது. சில பிளாக் அபிவிருத்தித் திட்ட இடங்களில் ஒரு வருஷமாக எந்த விதமான வேலேயும் நடைபெறவில்லே. எந்த விதமான சங்கடங் கள் இருந்தாலும், அவைகளே நிவர்த்தி செய்து வேலேயைத் தொடங்க வேண்டும்.

அடுத்தபடியாக, பெரும் தொழில்களே எடுத்துக் கொண்டால் நமது மாகாணத்தில் அதிக முன்னேற்றம் இல்லே என்பது தெரியும். நமது மாகாணத்திலுள்ள கனி வளங்களே ஆராய்ச்சி செய்வதற்கு ஒரு தனிக் குழு ஒன்றை ஏற்படுத்தி, எங்கே கனி வளங்கள் இருக்கின்றனவோ அங்கே பெரிய தொழில்களே நிறுவுவதற்கு ஏற்பாடு செய்ய வேண்டும். உதாரணமாக, முதுகுளத்தூர் மிகவும் பிற்போக்கான பிரதேசம். ராமநாதபுரம் ஜில்லாவில் பரமக்குடிப் பகுதியில் ஜிப்ஸம், லைம் ஸ்டோன் அபரிமிதமாக இருப்பதாகச் சொல்லப்படுகிறது. ஏற்றுமதி செய்யக்கூடிய சரக்காகவும் அதை உபயோகிக்கலாம். இவைகளேப் பயன்படுத்துவதற்கு ஒரு திட்டம் வகுத்தால்தான் அங்குள்ள மக்களின் பொருளாதாரம் அபி விருத்தி யடையும். அத்துடன் ராமநாதபுரத்தில் ஒரு ஸெமன்ட் தொழிற் சாலே நிறுவ வேண்டும் என்ற கருத்து போன பட்ஜெட்டிலும் இருந்தது. இப்பொழுதும் இருக்கிறது.

THE HON. SRI M. BHAKTAVATSALAM : ஒரு தொழிற் சாலேக்கு லேசென்ஸ் கொடுத்தாய்விட்டது.

SRI K. RAMACHANDRAN : லேசென்ஸ் கொடுத்தாலும் அதில் இன்னும் எத்தனே சங்கடங்கள் இருக்கின்றனவோ தெரியாது. ராமநாதபுரம் ஜில்லா மிகவும் பிற்போக்கான பிரதேசம் ஆகையால் விசேஷ கவனம் செலுத்தும்படி சர்க்காரைக் கேட்டுக்கொள்கிறேன். சிறு தொழில்கள், இண்டஸ்டிரியல் எஸ்டேட், இவைகள் எல்லாம் எங்கள் ஜில்லாவுக்குத் தெரியாத விஷயம்.

2-30 p.m.

விருதுநகர், ஸ்ரீவில்லிபுத்தூர், சாத்தூர் முதலியவைகள் ராமநாதபுரம் ஜில்லாவைச் சேர்ந்தவை என்பதற்காக அவைகளேப்பற்றி நான் குறிப் பிடுகிறேன். இதை கனம் அங்கத்தினர்கள் கவனத்தில் வைத்துக்கொள்ள வேண்டும், என்பதை தலேவர் அவர்கள் மூலமாக தெரிவித்துக் கொள் கிறேன். அந்த இடங்களில் இண்டஸ்ட்ரியல் எஸ்டேட்டுகளே அமைத்தால் அவைகள் நல்ல முறையில் நடக்கும். அதற்கு வேண்டிய சாதனங்கள் அங்கு இருக்கின்றன. ஆனல் அங்கு இருக்கக்கூடிய மக்களுக்கு என்ன நடக்கிறது என்று ஒன்றுமே தெரியவில்லே. இரண்டாவது ஐந்தாண்டு திட்டத்தைப்பற்றி சொன்னுல் அது என்ன என்று கேட்கக்கூடிய அளவில் அங்குள்ளவர்கள் இருக்கிருர்கள். இப்பொழுது முதல் ஐந்தாண்டு திட் டத்தை முடித்துவிட்டு இரண்டாவது ஐந்தாண்டு திட்டத்தில் இரண்டு வருஷங்கள் முடிந்த பிறகு நாம் இருக்கிருேம். இது என்ன என்று கேட்கும்போது இரண்டாவது ஐந்தாண்டு திட்டம் நடந்துகொண்டு இருக் கிறது, அது நடந்துதான் மெதுவாக வரும் என்று நான் சொல்வது உண்டு. (சிரிப்பு.) அது மெள்ளத்தான் வரும் என்றும் சொல்லிக் கொண்டு வருகிறேன். ஆகவே இந்த ஜில்லாவிற்கு எவ்வளவு கவனம் செலுத்த வேண்டுமோ அவ்வளவு கவனம் செலுத்த வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். இண்டஸ்ட்ரியல் எஸ்டேட்டை இராமநாதபுரம் ஜில்லாவில் அமைத்தால் அது நல்ல முறையில் அங்கே நடக்கும். ஏனென்றுல் அங்கே முக்கியமாக லேபர் சீப்பாக கிடைக்கக்கூடியதாய் இருக்கிறது. அங்கே பலர் வேலேயில்லாமல் இருப்பதால் லேபர் சீப்பாக கிடைக்கக்கூடிய வசதி இருக்கிறது. கூலிகள் சாதாரண முறையில் கிடைக்க

கூடியதாக இருப்பதால் அங்கே இண்டஸ்ட்ரியல் எஸ்டேட்டை ஆரம்பித்தால் நலமாக இருக்கும், அதற்கு வேண்டிய வாய்ப்புகளும் அங்கே இருக்கின்றன. அந்த வாய்ப்புகளை பயன்படுத்திக்கொள்ள வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

அடுத்தபடியாக, கைத்தறி நெசவாளர்களுடைய பிரச்னைகளைப்பற்றி நாம் ஒவ்வொரு வருஷமும் சொல்லிக்கொண்டுதான் வருகிறோம், அவர்களுக்கு பணமும் ஒதுக்கிக்கொண்டுதான் வருகிறோம். ஆனால் எந்த விதத்திலும் அவர்களுடைய நிலைமை முன்னேற்றமடைந்ததாக தெரியவில்லை. அவர்கள் கஷ்டப்பட்டுக்கொண்டுதானிருக்கிறார்கள். அவர்களுக்கு வேண்டிய திட்ட வட்டமான எந்த திட்டமும் இந்த பட்ஜெட்டில் இல்லை. முன்பு ராஜாஜி அவர்கள் சொல்லிய மாதிரி இரண்டு தினுசு துணியை கைத்தறிக்கு என்று ஒதுக்கினால்தான் அவர்களுடைய கஷ்டம் ஓரளவில் நீங்கும். அதற்கு வேண்டிய முயற்சிகளை எடுத்துக் கொள்ள வேண்டும் என்றும் கேட்டுக்கொள்கிறேன். அப்படிச் செய்தால் பல லட்சக்கணக்கான கைத்தறி நெசவாளர்களுக்கு பெரிய உதவி அளித்ததாக இருக்கும். இல்லாவிட்டால் தேக்கம் இருந்துகொண்டே தான் இருக்கும். மத்திய சர்க்கார் இவர்களுக்கு என்று ஐந்து லட்சம் ரூபாய் மானியமாகவோ, அல்லது கடனாகவோ கொடுக்கப் போவதாக பத்திரிகைகளில் பார்த்தேன். சென்னை மாகாணத்தில்தான் அதிகப்படியான கைத்தறி நெசவாளர்கள் இருக்கின்றார்கள். அதனால் அந்தத் தொகையில் பெரும் அளவு நம் மாகாணத்திற்கு என்று வாங்கி நல்ல திட்டங்களை அவர்களுக்கு அமைத்துக் கொடுக்கவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

அடுத்தபடியாக ரோடுகள் என்பதைப்பற்றி சொல்ல வேண்டியதாக இருக்கிறது. கிராமங்களில் ரோடுகள் மிகவும் குறைவாக இருக்கின்றன. கிராமங்களில் இன்னும் 40 அல்லது 50 மைல்களுக்குக் கூட ரோடுகள் இல்லாமலேயே இருக்கிறது. அதனால் கிராமங்களில் ரோடுகளை அபிவிருத்தி செய்ய வேண்டும் என்பதற்காக ஒரு தனியான திட்டத்தை அமைத்து அதற்கு அதிகப்படியான பணத்தை ஒதுக்கி வைத்து திட்டங்களை நிறைவேற்ற வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

பொதுவாக பட்ஜெட்டினுடைய ஓவர்ஆல் அமைப்பைப் பார்த்தால் புது வரிகள் என்ற வகையில் வரிகள் போட்டிருக்கிறார்கள். துண்டு விழக் கூடிய ஒரு கோடி 35 லட்சம் ரூபாயை சரிக்கட்டுவதற்காக இப்படி வரி போடப்படுகிறது என்று சொல்லப்படுகிறது. ஆனால் பட்ஜெட் நிலைமையைப் பார்த்தால் அப்படி வரி போட வேண்டிய அவசியம் இருப்பதாகத் தெரியவில்லை. பட்ஜெட் இனங்களில் சொல்லப்படுகிற சில வருவாய்களிலிருந்து இப்படி துண்டு விழுவதை சரிக்கட்டுவதற்கு இடம் இருக்கிறது. வருவாயில் எதிர் பார்ப்பதற்கு அதிகப்படியாக சில இனங்களில் வருவாய் வருகின்றன. அவைகளை வைத்துக்கொண்டு துண்டு விழுவதை சரிக்கட்டிக் கொள்ளலாம். அதனால் வரி போட வேண்டிய அவசியமே இல்லை. இப்பொழுது துண்டு விழக்கூடிய அளவில் அது ஒரு பெரிய துண்டு என்று சொல்லவும் முடியாது. சில இனங்களிலிருந்து அதை சரிக்கட்டிக் கொள்வதற்கு இடம் இருப்பதால் புது வரிகள் போட வேண்டிய அவசியமே இல்லை.

பல அபிவிருத்தி திட்டங்களைப்பற்றி பேசும்போது என்.ஜி.ஓ.-க்களைப் பற்றி பேசிக்கொண்டு வருகிறோம். அவர்களுக்கு நல்ல சலுகைகள் கொடுத்தால் நாம் போடும் திட்டங்கள் நல்ல முறையில் வேலை செய்வதற்கு உதவியாக இருக்கும். நாலு கோடி, ஐந்து கோடி என்று திட்டம் போடுவதில் பிரயோசனம் இல்லை. நாம் என்.ஜி.ஓ.-க்களின் வாழ்க்கைத் தரம் உயர வேண்டும் என்று சொல்லிக் கொண்டிருக்கிறோம். இந்த பட்ஜெட்டில் கொடுக்கப்பட்டிருக்கிற புள்ளி விவரங்களை வைத்துக் கொண்டே பார்த்தாலும் அவர்களுக்கு அதிகப்படியாக கொடுக்க முடியும். அப்படிக் கொடுத்தாலும் இப்பொழுது பட்ஜெட்டில் துண்டு விழக்கூடிய தொகை கூட வராது. ஆகவே இதையும் அரசாங்கம் கவனித்து நடவடிக்கை எடுத்துக்கொள்ள வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

4th March 1958] [Sri K. Ramachandran]

அடுத்தபடியாக சிறு சேமிப்பு திட்டத்தைப்பற்றி சொல்ல விரும்புகிறேன். இந்த திட்டம் ஒரு நல்ல திட்டம்தான். சிறு சேமிப்பு ரொம்பவும் அவசியம்தான். அதைப்பற்றி ஆட்சேபணை கிடையாது. ஆனால் இன்றைக்கு அதை வசூலிக்கும் முறைதான் ஆட்சேபிக்கக்கூடியதாக இருக்கிறது. சாதாரணமாக ராமநாதபுரத்தின் நிலைமை எல்லோருக்கும் நன்றாகத் தெரியும். அங்கு எப்படி சிறு சேமிப்பு மூலமாக பணம் வசூலிக்கப் படுகிறது என்று போய்ப் பார்த்தால் நன்றாகத் தெரியவரும். சாதாரண மாக ஏ.சி.டி.ஓ. பணம் வேண்டும் என்று கேட்கிறார். பணம் கொடுக்கா விட்டால் கணக்குப் புஸ்தகத்தை எடு என்று சொல்லுகிறார். இப்படி சிறிய வியாபாரிகளுக்கு பணம் வசூலிப்பதில் பல தொல்லைகளை உண்டாக்கு கிறார்கள். கணக்கை எடுத்து அதன் பேரில் கண்டபடி நடவடிக்கை எடுத்துக் கொள்ளுகிறார்கள். அத்துடன் தாலூகா ஆபீசர்களும் சேர்ந்து கொள்ளுகிறார்கள். ஏன் அப்படி வசூலிக்க வேண்டும் என்று கேட்டால் எங்களுக்கு டார்ஜெட் இருக்கிறது, அதன்படி வசூலிக்க வேண்டியதாக இருக்கிறது என்று சொல்லுகிறார்கள். அப்படிச் சொல்லி ஐந்து ரூபாயா வது கொடு என்று கேட்கிறார்கள். அந்த நிலைமையில் அங்கேயெல்லாம் சிறு சேமிப்பு மூலமாக பணம் வசூல் செய்யப்படுகிறது. இப்படி வசூல் செய்வது தவறான முறை. மற்றும் அனாதைப் பிள்ளைகளுக்கு சர்ட்டிபி கேட் வேண்டும் என்று தாலூகா அதிகாரிகளைக் கேட்டால் அவர்கள் ஐந்து ரூபாய் கொடுத்தால் சர்ட்டிபிகேட் கொடுக்க முடியும் என்று சொல்லு கிறார்கள். ஏழை அனாதை பிள்ளைகளுக்கு என்று கேட்கும்போது இப்படி வசூல் செய்யலாமா என்பதைக் கேட்கிறேன். அவர்களே கன்செஷன் வேண்டும் என்று கேட்கும்போது அவர்களிடமிருந்து வசூல் செய்யலாமா ? இதற்கு முன்பு யுத்தம் நடந்தபோது **War Fund** என்று இப்படித்தான் வசூல் செய்தார்கள். அதிகாரிகள் பயமுறுத்தி வசூல் செய்வது என்பது சரியல்ல. இப்படி நிர்ப்பந்தம் செய்து வசூல் செய்வது என்பது அவ்வளவு நல்ல காரியம் அல்ல என்பதை நான் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

அடுத்தபடியாக குளம் தூர்வை எடுக்கும் சம்பந்தமாக சில சொல்ல விரும்புகிறேன். இதைப்பற்றி ரிவினியூ மந்திரி அவர்களிடத்திலும் பல முறை சொல்லி இருக்கிறேன். இதைப்பற்றி விசாரணை செய்து ஒரு முடிவுக்கு வரவேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். இதனால் 20 அல்லது 30 ஆயிரம் ஏக்கர் நிலம் பாதிக்கக்கூடியதாக இருக்கிறது. இந்தப் பிரச்னைகளை யெல்லாம் கவனித்து ஆவனவற்றைச் செய்து கொடுக்க வேண்டும் என்று கேட்டுக்கொண்டு என்னுடைய உரையை இத்துடன் முடித்துக் கொள்ளுகிறேன்.

Sri A. Y. S. PARISUTHA NADAR : கனம் சபாநாயகர் அவர்களே, மதிப்பிற்குரிய நிதி மந்திரி அவர்கள் சமர்ப்பித்த வரவு செலவு திட்டத்தை நான் மனப்பூர்வமாக ஆதரித்து சில வார்த்தைகளைச் சொல்ல விரும்புகிறேன். இந்த வருஷ பட்ஜெட்டில் பள்ளிக்கூடங்களில் வாசித்து வரும் மாணவர்களுக்கு மத்தியான உணவு கொடுப்பதற்கு என்று 20 லட்சம் ரூபாய் ஒதுக்கப்பட்டிருக்கிறது. ஏற்கெனவே திட்டத்தில் ஒதுக்கப்பட்டிருந்தது, ஐந்து லட்சம் ரூபாய். இந்த வருஷத்தில் விவசாயி களுடைய மாணவர்களுக்கு அது கிடைக்கப்போவதில்லை. அப்படி இல்லா மல் அவர்களுக்கும் நிரந்தரமாகக் கிடைக்கும்படி ஏற்பாடு செய்யவேண்டும். ஒரு தடவை கொடுத்த சலுகையை நிறுத்தாமல் நீடித்துக் கொடுக்கும் படியாக நான் கேட்டுக்கொள்ளுகிறேன். பொதுவாக எல்லா பள்ளி மாண வர்களுக்கும் கிடைக்கும்படியாக ஏற்பாடு செய்ய வேண்டும். குறிப்பாக முனிசிபாலிட்டி பள்ளிக்கூடங்களில் படிக்கும் மாணவர்களுக்கும் அது கிடைக்கும்படியாக இருக்க வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

அடுத்தபடியாக விவசாய வருமானத்திற்கு போடப்போகும் வரி. இதைப் பற்றி விரிவாக கனம் ஸ்ரீநிவாச அய்யர் சொல்லி விட்டார். நாம் உணவு உற்பத்தியை பெருக்க வேண்டும் என்று சொல்லிக்கொண்டிருக்கும் காலத் தில் நில வருமானத்திற்கு வரி விதிப்பது என்பது சரியல்ல. அதனால் விவசாயிகளுக்கு உணவு உற்பத்தி செய்வதில் உற்சாகம் குறைந்து விடும். ஏற்கெனவே அவர்களுடைய வருமானம் குறைந்து கொண்டே வருகிறது. அவர்கள் உற்சாகம் கொண்டு அதிகப்படியாக உற்பத்தி செய்ய முயற்சி

[Sri A. Y. S. Parisutha Nadar] [4th March 1958

எடுத்துக்கொண்டு வரும்போது அவர்களுக்கு வரி போட்டால் அவர்களுடைய உற்சாகம் குறைந்து போகும். சாதாரணமாக ஒரு மா வெள்ளாமை செய்தால் அதிலிருந்து 10 கலம் வரும் என்றால் அதிகமாக 15 கலம் உற்பத்தி செய்ய வேண்டும் என்று முயற்சி எடுத்துக்கொள்ளும்போது விவசாயி அதிகப்படியாக செலவு செய்ய வேண்டியதாக இருக்கிறது. அதிகப்படியான லாபம் அடைய வேண்டும் என்று செலவு செய்யும்போது அவனுக்கு அதிகப்படியான வரி போட்டால் அவன் அதிகப்படியான உற்பத்தி செய்ய முன்வர மாட்டான். உண்மையிலேயே அவனுக்கு உற்பத்தி செய்வதற்கு இஷ்டம் இருக்காது என்பதை நான் தாழ்மையுடன் தெரிவித்துக் கொள்ளுகிறேன். ஆகவே விவசாயிகளுக்கு வருமான- வரி போடுவதாக இருந்தால் அதை தீவிரமாக ஆலோசனை செய்து அதன் பிறகு வரி போட முன்வர வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். தற்சமயம் இதை அமுலுக்குக் கொண்டுவர வேண்டுமா என்பதையும் யோசித்துகொண்டுவரவேண்டும் என்றும் கேட்டுக்கொள்ளுகிறேன்.

மாணவர்கள் நல்ல முறையிலேயும், ஒழுங்கான முறையிலேயும், பிற்காலத்தில் நல்ல பிரஜைகளாகவும் வளரவேண்டுமானால், அவர்கள் சாரணர் இயக்கத்தில் ஈடுபடவேண்டுமென்பதற்காக இந்த ஆண்டிலே 20 ஆயிரம் ரூபாய் ஒதுக்கப்பட்டிருக்கிறது. இவ்வளவு பெரிய ஸ்தாபனத் திற்கு இத்தொகை மிகவும் குறைந்தது என்று நான் நினைக்கிறேன். அனேக பள்ளிகளில் நான்கில் ஒரு பங்கு மாணவர்கள் கூட இந்த இயக்கத்தில் சேருவது இல்லை. மேலும் ஏராளமான மாணவர்கள் இவ் வியக்கத்தில் சேர்ந்து, பிற்காலத்தில் நல்ல ஒழுக்கமுள்ளவர்களாக வாழ் வதற்கேற்றபடி இன்னும் அதிகப்படியாக பணம் ஒதுக்கவேண்டுமென்று நான் கேட்டுக்கொள்ளுகின்றேன்.

2-40 p.m.

தஞ்சை ஜில்லா போர்டைப் பொறுத்த வரையில், அதன் கீழுள்ள பள்ளிகளில் சாரணர் சூபரின்டெண்டெண்ட் ஒருவர் தனியாகப் போடப்பட்டு வேலை பார்த்து வருகிறார். அதே போல, தஞ்சை முனிசிபாலிடியிலுள்ள பள்ளிகளுக்கும் ஒரு சாரணர் சூபரின்டெண்டெண்ட் போடவேண்டுமென்று தீர்மானித்து சர்க்கார் அனுமதி கோரியிருந்தும் இதுவரை எந்தவிதமான பதிலும் கிடைக்கவில்லை. எந்த முனிசிபாலிடியாக இருந்தாலும் சரி, எந்த ஜில்லா போர்டாக இருந்தாலும் சரி, சாரணர் இயக்கத்தை விரிவு படுத்தும்பொருட்டு புதிதாக சூபரின்டெண்டெண்ட் போடுவதற்கோ, இன்னும் மற்ற விஷயங்களுக்கோ அனுமதி கோரினால், அந்தக் காரியத்தைப் பார்த்து உடனடியாகச் செய்துகொடுக்கும்படியாக அமைச்சர் அவர்களைக் கேட்டுக்கொள்ளுகிறேன்.

அடுத்தபடியாக, பெரிய கிராமங்களாக இருந்தாலும் சரி, சிறிய கிராமங் களாக இருந்தாலும் சரி, நகரங்களாக இருந்தாலும் சரி, குடி தண்ணீர் வசதி இருக்கவேண்டியது அவசியம். நல்ல குடி தண்ணீர் இல்லாவிட்டால் அனேக நோய்கள் பரவுவதற்கு ஏதுவாகும். அதற்காக மத்திய அரசாங் கத்திலிருந்து பண உதவி கோரியாவது பெறலாம். அப்படி மத்திய அரசாங்கத்திடமிருந்து நாம் கோருகிற பண உதவி கிடைக்கவில்லையென்றா லும், ஐந்தாண்டுத் திட்டத்தில் நாம் கோருகிற குடி தண்ணீர்த் திட்டங்களை அவர்கள் சேர்த்துக்கொள்ளவில்லை யென்றாலும், நமது சென்னை அரசாங் கமே அதனுடைய நிதியிலிருந்து தொகை ஒதுக்கி, இந்த வகையில் என்னென்ன நன்மைகள் செய்யவேண்டுமோ அதைச் செய்யவேண்டு மென்று நான் கேட்டுக்கொள்ளுகின்றேன்.

முக்கியமாக தஞ்சை ஜில்லாவிலே 63 ஆண்டுகளுக்கு முன்பாக குடி தண்ணீர்த்திட்டம் ஆரம்பிக்கப்பட்டதைப்பற்றி சென்ற தடவை சொல்லி யிருக்கிறேன். இதுபற்றி பல மனுக்கள் எழுதியிருக்கிறேன். இரண்டொரு ஆண்டுகளுக்குள்ளே 10, 15 குழாய்கள் வெடித்துப்போய் தண்ணீர் சப்ளை செய்ய முடியாமல் பாதித்திருக்கிறது. பழைய திட்டங்களைப் புதுப்பிப்பதற்கான காரியங்களை உடனடியாகச் செய்து, அதற்கு வேண்டிய பணத்தைச் சென்னை அரசாங்கமே ஒதுக்கி, வேண்டிய காரியங்களைச் செய்யும்படியாக நான் கேட்டுக்கொள்ளுகிறேன்.

4th March 1958] [Sri A. Y. S. Parisutha Nadar]

அடுத்தபடியாக, தமாஷா வரியைப்பற்றி எடுத்துக்கொண்டால், சினிமா பார்ப்பது சரியல்ல என்று சொல்கிருர்கள். அதற்கு ஏற்கெனவே 25 சத விகிதம் வரி போட்டிருக்கிருர்கள். டாக்குமெண்டரி பில்ம்முக்காக வரி என்றும், ஷோ டாக்ஸ் என்றும், தமாஷா வரி என்றும் விதிப்பதினுல், சினிமாக்காரர்கள் பாதிக்கப்படமாட்டார்கள் ; சினிமா பார்க்கிற ஏழை மக்கள்தான் பாதிக்கப்படுகிருர்கள். குறிப்பாக நாலணு, ஐந்தணு டிக்கட் வாங்கிக்கொண்டுபோய் சினிமா பார்க்கக்கூடிய ஏழை மக்கள்தான் ரொம்பப் பேர்கள் பாதிக்கப்படுகிருர்கள். அதையும் யோசனை செய்து, வரி விதிக்கும்போது பார்த்து விதிக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

மதுவிலக்கு திட்டத்திஞல் பாதிக்கப்பட்ட தொழிலாளிகளுக்கு ஏதோ அதிகச் சலுகை செய்ததாக ஒன்றும் தெரியவில்லை. அவர்களுக்கு என்று கிராமங்களிலே நிலங்கள் கொடுப்பதாக திட்டம் இருந்தாலுங்கூட, அந்தக் கிராமங்களிலே இருக்கிறவர்கள் நிலத்தைச் சேரவொட்டாமல் தடுத்து அவர் களுக்கு எந்த விதமான நலனும் கிடைக்கவில்லை. விலைவாசிகள் உயர்ந்திருக்கும் இந்தக் காலத்திலே, அவர்கள் குடும்பம் நடத்தி ஜீவனம் செய்வதற்கு கஷ்டப்படுகிருர்கள். அத்தகையவர்கள் பதனீர் விற்கலாம் என்று திருநெல்வேலி, இராமநாதபுரம் ஜில்லாக்களிலே உத்தரவு கொடுத் திருக்கிருர்கள். இப்பொழுது சேலம் ஜில்லாவில்கூட உத்தரவு கொடுத் திருக்கிருர்கள். ஆனுல், தஞ்சை ஜில்லாவிலே ஜனங்கள் கஷ்டப்பட்டுக் கொண்டிருக்கிருர்கள்.

அதிலும் கூட்டுறவு சங்கம் மூலமாகவெல்லம் காய்ச்சி விற்பதென்ருல், மற்ற ஜில்லாக்களில் இருக்கும் ஒரு விகிதாச்சாரம் தஞ்சை ஜில்லாவில் கிடைப்பதில்லை. பதனீர் விற்ருல்தான் ஜீவனம் இருக்கும் என்று தெரிய வருகிறது. அதனுல், தஞ்சை ஜில்லாவிலே உள்ள மரமேறிப் பிழைப்பவர்களுக்கு அந்த லைசென்ஸ் கொடுத்து அவர்களுக்கு உதவி செய்யும்படியாக கேட்டுக்கொள்ளுகிறேன்.

ஏற்கெனவே எக்ஸைஸ் இலாகாவின் கண்டிரோல் இருந்தபோது ஒரு சில மரங்களுக்கு மட்டும் ' மார்க் ' போட்டுவிட்டு, சிலவற்றை இஷ்டப்படி விட்டுவிட்டு, பதனீரை துஷ்பிரயோகம் செய்கிருர்கள். அதற்காக ஒரு சின்ன வரி (ட்ரீ டாக்ஸ்) போட்டாவது கண்ட்ரோல் பண்ணும்படியாகக் கேட்டுக்கொள்ளுகிறேன். தென்னை மரத்திலிருந்து பதனீர் இறக்கி, அதி லிருந்து வெல்லம் காய்ச்சும்போது அது வெண்மையாக சாக்கலேட் நிறத்திலே இருக்கும். அதை மேலும் பரிசோதனை செய்து பார்க்க வேண்டும். சேலம், கோயமுத்தூர் ஜில்லாக்களில் தென்னை மரங்களி லிருந்து கிடைக்கும் பதனீரிலிருந்து செய்யும் வெல்லத்தில் வாசனைத் திரவியங்களைப் போட்டுக் கொடுக்கிருர்கள். அந்த வெல்லம் சாக்லேட் மாதிரி இருக்கிறது. அதை நல்ல முறையிலே சாக்லேட் போன்று செய்ய முடியுமா என்று ஆராய்ச்சி செய்து, கவனித்து, அதன் மூலம் தொழி லாளர்களுக்கு வேலை கொடுத்து ஆதரிக்கும்படியாகக் கேட்டுக்கொண்டு, என்னுடைய பேச்சை இத்துடன் முடித்துக்கொள்ளுகின்றேன்.

**SRIMATHI KAMALAMBUJA AMMAL :** கனம் சபாநாயகர் அவர்களே, நமது நிதி அமைச்சர் அவர்கள் கொண்டுவந்த இந்த நிதி நிலை அறிக்கையின் மீது ஒரு சில வார்த்தைகள் சொல்ல விரும்பு கிறேன். முதலிலே, கால நிலையைப்பற்றிச் சொல்ல வேண்டுமானுல், மற்ற ஆண்டுகளைவிட இந்த ஆண்டு ஏறக்குறைய இருந்தாலுங்கூட, பணத் தைச் சரிக்கட்டும் வகையிலே விளைச்சல் போதிய அளவு விளைந்திருக்கிறது என்று புள்ளி விவரம் கொடுத்திருக்கிருர். அந்தப் புள்ளி விவரத்தி லிருந்து, ஏறக்குறைய 2 லட்சம் டன் உற்பத்தி தான் நாம் உணவுப் பெருக்கத்திலே குறைவுபட்டிருக்கிறேம் என்பதை நாம் தெளிவாக அறிகி றேம். புள்ளி விவரங்களின் மீது சில நண்பர்கள் நம்பிக்கையில்லை என்று தெரிவிக்கிருர்கள். இங்கே கொடுத்திருக்கும் புள்ளி விவரங்கள் கூட சரியானவை அல்ல என்று சொல்லுகிருர்கள். அவர்களும் தங் களுடைய புள்ளி விவரங்களை இதே நிலையிலேதான் எடுக்கக்கூடும் ஆதலால், அதற்கும் இதற்கும் வித்தியாசம் இருக்கும் என்று அவர்கள் சொல்வது, வேண்டுமென்றே சொல்ல வேண்டுமென்ற காரணத்திற்காகச் சொல்லுகிருர்களோ என்னவோ ! அதுவும் புதிராகத்தான் இருக்கிறது.

உணவு நிலைமையைப்பற்றிக் குறிப்பிடும்போது, ஒரு நல்ல அறுவடையின் பயனாக விலைவாசிகள் இப்பொழுது ஸ்திரமாகி வருகின்றன என்றும், இருந்தபோதிலும் நாம் இன்னும் விழிப்புடன் இருந்து நிலைமையைக் கவனிக்கவேண்டிய அவசியம் இருக்கிறது என்றும் குறிப்பிட்டிருக்கிறார். நியாய விலைக் கடைகள் மூடப்படவேண்டும் என்று சொல்வதால், விலைவாசிகள் என்ன ஆனாலும் மூடப்பட்டுவிடும் என்று அர்த்தம் இல்லை. தேவையானால் நியாய விலைக் கடைகள் இருக்கும் என்ற அடிப்படைக் கொள்கையிலேதான். இந்த வாசகம்கூட அமைந்திருக்கிறது என்பதை நான் அவர்களுக்குத் தெரிவித்துக்கொள்ளுகின்றேன்.

விவசாய உற்பத்தியிலே மிகவும் கவனம் செலுத்த வேண்டியது அவசியமாக இருக்கும்போது, காலா காலத்திலே விவசாயிகளுக்குக் கிடைக்க வேண்டிய உரம், சற்று குறைவாக இருப்பதினாலே, கிடைக்க முடியாமல் போகிறது என்று நினைக்கிறேன். ஆகவே, விவசாய உற்பத்திக்குத் தேவையான உரங்களை தயாரிப்பதற்கு வேண்டிய முயற்சிகளை அரசாங்கம் எடுக்கும் என்று நினைக்கிறேன்,

பூச்சி மருந்துகளுக்காக லட்சக்கணக்கான ரூபாய்கள் செலவு செய்ய உத்தேசித்திருந்தாலும், அவைகள் விவசாயிகளுக்குக் காலா காலத்தில் கிடைப்பதில்லை. அப்படிக் கிடைப்பதற்கு வேண்டிய வழிவகைகளை விவசாய அதிகாரிகள் கையாளவேண்டுமென்று கண்டிப்பான உத்திரவு போட வேண்டுமென்று மாத்திரம் நான் வற்புறுத்துகிறேன்.

அரசாங்கத்தாரால் கொடுக்கும் சலுகைகளையும், பண உதவிகளையும் பற்றி மக்கள் தெரிந்துகொள்வதற்கான ஏற்பாடுகளை செய்திருப்பதாக அமைச்சர் அவர்களுடைய உரையிலே குறிப்பிட்டிருக்கிறார். அது மிகவும் அவசியம். விவசாயிகளுக்குக் கிடைக்கக் கூடிய வசதிகள் இன்ன இன்ன என்பதை அவர்கள் உணரவேண்டுமானால், ஜில்லாதோறும் பப்ளிஸிடி ஆபீசர்கள் சுற்றுப்பிரயாணம் செய்யும்போது விவசாயிகளுக்கு என்னென்ன வசதிகள் கொடுக்கப்படுகின்றன என்பதை அவர்கள் தெளிவாக விளக்கிச் சொல்வார்களானால் அவர்கள் தங்களுக்குத் தேவையான வசதிகளைப் பெறுவதற்கு ஏதுவாக இருக்கும் என்று நான் இங்கு தெரிவித்துக்கொள்ளுகின்றேன்.

சமுதாய அபிவிருத்தியின் முக்கிய குறிக்கோள் விவசாயிகளுக்கு வேண்டிய வசதிகள் என்ன என்பதைத் தெளிவுபடுத்தவேண்டும் என்பதினாலே சமுதாய அபிவிருத்தி வட்டாரங்களிலே இருக்கும் அதிகாரிகளும் சிப்பந்திகளும், அந்தந்தக் கிராமங்களிலே இருந்துவிடுவதினாலே அவர்களுக்கு வேண்டிய வகையிலே பயன்பட முடியாமல் போகிறது. அபிவிருத்தி வட்டாரங்களில் இருக்கக்கூடிய அதிகாரிகள் அந்த வட்டாரத்தில் உள்ள விவசாய மக்களுடைய தேவை என்ன, அவற்றை எந்த வகையில் பூர்த்தி செய்யலாம் என்பதை அக்கறையோடு கவனிக்கவேண்டும். அப்படி கவனிக்க வேண்டும் என்பதற்குக் கண்டிப்பான உத்தரவும் இருக்க வேண்டும். குறிப்பாக ஒவ்வொரு நாளும் ஒரு கிராமத்திற்காவது சென்று ஆங்காங்குள்ள விவசாயிகளுடைய தேவை என்ன, பூச்சி மருந்து தேவையா, விதை தேவையா, உரம் தேவையா என்று கேட்டு அறிந்து அவர்களுடைய தேவையைப் பூர்த்தி செய்ய வேண்டும். அப்படிச் செய்தால்தான் அந்த வட்டாரத்திலுள்ள மக்களுக்கு எல்லாம் நன்மை கிடைக்கும்.

2–50 p.m.

கைத்தறித் துணி தேங்கிக் கிடக்கிறது, தேங்கிக் கிடக்கிறது என்று பலர் வெறுமனே சொல்லிக்கொண்டிருக்கிறார்களே தவிர, அப்படிச் சொல்கிறவர்கள்கூட கைத்தறித் துணியைக் கட்டுவது இல்லை. ஒரு வேளை கதர் கட்டினால் கட்சிக் கட்டுப்பாட்டுக்கு முரணாக இருக்கலாம் என்று நினைக்கக்கூடும். கைத்தறித் துணியைக் கட்டுவதில் எந்தவிதமான முரண்பாடும் இருக்காது. கைத்தறித் துணி தேக்கமும் இருக்காது. மில் துணிகளுக்கு அவசியமும் இல்லை. அதனால் வெளிநாட்டிலிருந்து ஏராளமாக இறக்குமதி செய்ய வேண்டிய அவசியமும் இல்லை. கைத்தறித் துணி தேங்கிக் கிடக்கிறது, விற்பனை வசதி இல்லை என்பதாக பல பல புகார்களைச் சொல்வதை விடுத்து இனிமேலாவது எல்லோரும் கைத்தறித் துணியையே

4th March 1958] [Srimathi Kamalambuja Ammal]

உபயோகப்படுத்த வேண்டும் என்கிற முடிவுக்கு வரவேண்டும். பெண்களும், குழந்தைகளும் கைத்தறித் துணியையே உடுத்திக் கொள்வதற்கு ஏற்பாடு செய்யவேண்டும். இப்போது அநேகமாக கைத்தறித் துணியைப்பற்றி பேசுபவர்களுடைய வீடுகளில் போய்ப் பார்த்தால் பட்டுத் துணியும் மில்துணியும் தான் இருக்கும்.

அடுத்தபடியாக ராமநாதபுரம் கலவரத்தில் சேதம் அடைந்த மூவாயிரம் வீடுகளுக்கு ஏறக்குறைய 17 லட்சம் ரூபாய் செலவிட்டு புனர் நிர்மாணம் செய்ய அரசாங்கம் உத்தேசித்திருப்பதாக அமைச்சர் உரையில் காணப்படுகிறது. மக்கள் பொறுப்பற்ற முறையில் நடந்து சேதத்தை விளைவித்துக்கொண்டால் அதற்கு அரசாங்கம் என்ன செய்ய முடியும் என்று கேட்கிறேன். மக்கள் தங்கள் பொறுப்பை உணரவேண்டும். அப்போதுதான் அரசாங்கமும் நல்லமுறையில் நடக்கும். அரசாங்கத்தில் இருக்கக்கூடிய அமைச்சர்கள் எட்டுபேர் மாத்திரம் அரசாங்கத்தை நடத்திவிட முடியாது. மக்கள் தங்கள் பொறுப்பை உணராத வரையில் இவர்களால் நல்ல முறையில் நிர்வாகத்தை நடத்துவது கஷ்டம். பொறுப்பற்ற முறையில் கஷ்டத்தையும் நஷ்டத்தையும் உண்டாக்கிக்கொண்டு அந்த தண்டம் முழுவதையும் சர்க்காரே ஏற்றுக்கொள்ள வேண்டும் என்பது சரியாகாது.

அடுத்தபடியாக இப்போது சினிமா போன்றவைகளுக்கு வரி உயர்கிறது எனச் சொல்லப்படுகிறது. இதனால் எதோ ஒரு மாதத்திற்கு ஒரு முறை சினிமாவுக்குக் போகக்கூடியவர்கள் பாதிக்கப்படமாட்டார்கள். பொழுது போக்கு வரி போடுவது போலவே சினிமாவுக்குக் கதை எழுதக்கூடியவர்களுக்கு இத்தனை ரூபாய் வந்தால் இத்தனை பணம் அரசாங்கத்திற்கு வரியாகக் கொடுத்து விடவேண்டும் என்று நிர்ணயித்திருந்தால் அரசாங்கத்திற்கு நல்ல வருமானம் வந்திருக்கும் என்பதை இங்கே சுட்டிக் காட்ட விரும்புகிறேன்.

விவசாய உற்பத்தியைப் பெருக்கக்கூடிய நிலைமையில் இன்றையதினம் டீசல் ஆயிலுக்குப் போடும் வரி விவசாயிகளை பாதிக்காமல் இருப்பதற்கு விதிவிலக்கு அளிப்பது நல்லது என்பது என்னுடைய அபிப்பிராயம். விவசாயிகள் எவ்வளவுதான் கஷ்டப்பட்டு வேலை செய்தாலும்கூட உழுகின்றவனுக்கு ஒன்றும் மிச்சம் ஆகாது என்று சொல்கிற அடிப்படையில் அவர்களுக்கு மிச்சப்படுவது ஒன்றுமே கிடையாது. ஆகவே இன்று ஐந்து ஏக்கரா, 6 ஏக்கரா வரையில் வைத்துக் கொண்டிருக்கக்கூடிய விவசாயிகளுக்கு இந்த வரி மிகவும் சுமையாகத் தெரியும். ஆகவே விவசாயிகளுக்கு மாத்திரமாவது இதிலிருந்து விதிவிலக்கு அளிப்பது மிகவும் முக்கியம் என்பதைத் தெரிவித்துக்கொள்கிறேன். மேலும் மூவாயிரம் ரூபாய்க்கு அதிகம் இருந்தால்தான் வரி விதிக்கப்படும் என்று சொல்லப்படுகிறது. மூவாயிரம் ரூபாய்க்கு வருமானம் வரக்கூடிய விவசாயி இரண்டாயிரத்திற்கு மேல் செலவு செய்தால்தான் மூவாயிரம் வருமானம் வரக்கூடும். விவசாய வரி விதிப்பது சற்று யோசித்துச் செய்ய வேண்டிய காரியம். மொத்தத்திலுள்ள தொகைக்கு வருமான வரி நிர்ணயித்தால் கூட ஓரளவு நன்ருக இருக்கும் என்பதைத் தெரிவித்துக்கொள்கிறேன். இந்த வரி இடைக்காலத்திற்கு மாத்திரம் தான் என்று அமைச்சர் அவர்கள் குறிப்பிட்டிருக்கிருர்கள். அப்படி இருந்தாலும்கூட இடைக் காலத்திலேயே இது விவசாயிகளுக்கு அதிக பாதகம் விளைவிக்கும் என்பதை நான் தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன்.

மின்சாரத்தைப் பொறுத்த வரையில் எல்லா இடங்களுக்கும் மின் சாரம் நன்கு விஸ்தரிக்கப்படுகிறது. குறிப்பாக கிராமப் பகுதியில் ஐந்தாறு வருடங்களுக்கு முன்பு ஒரே இருளாக மண்டிக் கிடந்த இடங்களில் எல்லாம் இன்று நகரங்களைப் போல மின்சார விளக்குகள் ஒரே பிரகாசமாக எரிந்து கொண்டிருக்கின்றன. அது மாத்திரமில்லாமல் தண்ணீர் இறைப்பு இயந்திரங்களில் கிராமப் பகுதிகளில் அதிகம் இருக்கின்றன. ஆகவே மின்சார அபிவிருத்தியைக் குறித்து யாரும் குறை கூறுவதற்கில்லை. அதற்கு இன்னும் அதிகப் பணம் ஒதுக்கினாலும் கூட எல்லா மக்களுக்கும் அதனால் நன்மை உண்டாகிறது என்ற காரணத்தினால் அதை வரவேற்க வேண்டும்.

சிறிய நீர்ப்பாசன திட்டங்களில் நாம் அதிக கவனம் செலுத்த வேண்டியிருக்கிறது. பெரிய நீர்ப்பாசன திட்டங்களைவிட சிறிய சிறிய நீர்ப்பாசனத் திட்டங்களில் அதிக கவனம் செலுத்தினால்தான் ராஜ்யம் பூராவும் பரவலாக நன்மை கிடைக்கும். விவசாய உற்பத்தியும் அதிக மாகும். அதிலும் குறிப்பாக சென்னை மாவட்டத்தில் பொன்னேரி தாலூகா ஜலதாரை வசதி எதுவும் இன்றி மிகவும் பிற்போக்கான நிலைமையில் இருக்கிறது. சிறிய நீர்ப்பாசன வசதி எதுவும் கிடையாது. மிகவும் பிற்போக்காக இருக்கக் கூடிய அந்தத் தாலூகாவில் சிறிய நீர்ப்பாசன திட்டங்களில் அதிக கவனம் செலுத்த வேண்டும். கும்முடிப்பூண்டி, போன்ற இடங்கள்

> விண்நின்று பொய்ப்பின் விரிநீர் வியன்உலகத்து
> உள்நின்று உடற்றும் பசி

என்பது போல மழை இல்லாத காரணத்தினால் மக்கள் வாழமுடியாத நிலைமையில் இருக்கிறார்கள். நெல் பயிர் அங்கே அதிகமாகக் கிடையாது. தோட்டப்பயிரும் ஓரளவுதான். அங்கே சிறிய சிறிய நீர்ப்பாசனத் திட்டங் களில் கவனம் செலுத்தினால் மழை காலங்களில் கிடைக்கும் சொற்பத் தண்ணீரையாவது சேமித்து வைத்துக்கொள்ள வாய்ப்பு ஏற்படும். அங்கே குழாய்க்கிணறுகளில் அதிக கவனம் செலுத்த வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். அங்கே ஏறக்குறைய 200, 300 அடிகளில் தண்ணீர் கிடைக்கிறது. குழாய்க்கிணறுகள் அதிகம் ஏற்படுத்தினால் நன்மை மிகவும் உண்டு, மக்கள் நன்மை அடைவார்கள் என்று சொல்லிக் கொண்டு அமைச்சர் அவர்கள் சமர்ப்பித்திருக்கும் வரவு செலவுக் கணக்கை ஆதரிக் கிறேன்.

3 p.m. * SRI A. V. P. ASAITHAMBI : சட்டமன்ற தலைவர் அவர்களே, இவ்வாண்டு நிதி நிலை அறிக்கையை நமது நிதியமைச்சர் அவர்கள் படிக்கக் கேட்டோம். நாங்களும் அதைப் பன்முறை படித்துப் பார்த்தோம். அப்படிப் பார்த்ததிலிருந்து திராவிட முன்னேற்றக் கழகத்தின் பிரிவினைக் கொள்கையானது எவ்வளவு தூய்மையானது, எவ்வளவு நியாய மானது என்பதை வற்புறுத்துவதைப் போன்று, அதற்கு ஒரு ஆதார மாகத்தான் இந்த நிதி நிலை அறிக்கை இருக்கிறது என்று நான் இங்கு கூற விரும்புகிறேன். கடந்த ஆண்டு நிதி நிலை அறிக்கையை அமைச்சர் அவர்கள் இந்த மன்றத்தில் சமர்ப்பித்தபோது அதன் மீது பேசிய என் மதிப்பிற்குரிய நண்பர் கருணாநிதி அவர்கள் அந்த நிதி நிலை அறிக்கை யில் ஒரு நிச்சயமற்ற அவலநிலையை குறிக்கக்கூடிய அளவிற்கு பல வார்த்தைகளின் முடிவிலும் ''லாம்'' ''லாம்'' என்கிற எழுத்துக் களோடு முடிகிற வாசகங்களை எடுத்துக் காட்டினார்கள். இந்த ஆண்டு நிதி நிலை அறிக்கையை எடுத்துக்கொண்டால் அந்த ''லாம்'' போய் இல்லை. சுத்தமாக இல்லை என்கிற அளவிற்கு பல இடத்திலும் வாசகங் கள் இருப்பதை நாம் பார்க்கிறோம். கடந்த ஆண்டைவிட இந்த ஆண்டு நிதி நிலை அறிக்கையைப் பார்க்கும்போது எங்கள் கோரிக்கை தீவிரப்படுத்த வேண்டிய ஒன்று என்பதை வற்புறுத்தும் நிலையில்தான் இந்த ஆண்டு நிதி நிலை அறிக்கை அமைந்திருக்கிறது. துண்டு விழுகிற தொகையை சரிக்கட்டுவதற்கு வேண்டி அமைச்சர் அவர்கள் வரி விதிக் கிறேன் என்று சொல்கிறார்களே, அந்தயிடத்தில் தான் எங்களுக்கும் ஆளும் கட்சியினருக்கும் இடையே வேற்றுமை இருக்கிறது. இந்த நிலப் பரப்பில் இருந்து எக்ஸைஸ் வரியாகவும், வருமான வரியாகவும், ரெயில்வே வரியாகவும் தபால் தந்தி இலாகா வரியாகவும் பல கோடிக் கணக்கான ரூபாய் வருடா வருடம் மத்திய அரசாங்கத்திற்குச் செல்கிறது. அந்தப் பணத்தில் இருந்துதான் மத்திய சர்க்கார் நமக்குத் தருகிறார் களே தவிர அவர்களாக நமக்கு இலவசமாக ஒரு நயா பைசா கூட கொடுப்பது கிடையாது. நாம் கொடுக்கிற காசைக் கொடுப்பதற்கு நாம் கேட்டும் அவர்கள் மறுக்கக்கூடிய அளவிற்கு இந்த பட்ஜெட்டிலே நிதிக் கமிஷன் சொன்னதையும் நிதியமைச்சர் அவர்கள் குறிப்பிட்டிருக்கிறார் கள். என்னைப் பொறுத்தவரையில் நான் ஒன்று நிச்சயமாகச் சொல் வேன். நிதியமைச்சர் அவர்கள் பல புள்ளிவிவரங்களைக் கொடுக்கிறார் களே தவிர இந்த சென்னை ராஜ்யத்தில் இருந்து வருஷம் ஒன்றுக்கு

4th March 1958] [Sri A. V. P. Asaithambi]

வரிகள் மூலமாக மத்திய சர்க்காருக்கு எவ்வளவு கோடி ரூபாய் போகிறது என்பதை தனியாக சொல்லி அதற்கு புள்ளி விவரம் போட்டு அவர்கள் காண்பிப்பார்கள் என்று சொன்னால் காங்கிரஸில் இருப்பவர்கள் கூட எங்கள் பிரிவினைக் கொள்கையை ஒப்புக் கொள்வார்கள் என்பது நிச்சயம். இதுபற்றி அரசாங்கத்திற்கு எழுதிக்கூட சொல்ல மறுக்கிறார்கள். அந்த அளவிற்கு நம் பணம் வடக்கே செல்கிறது. ஆனால் நாம் அப்படி அவர்களுக்கு பணம் கொடுக்கும்போது அதைத் தர அவர்கள் மறுக்கிறார்கள். ஆகவே, துண்டு விழும் தொகைக்கு வரிகள் போடப்படுகிறது. இந்த நிலைமை நீடிக்கும் என்று சொன்னால் நம் நாடு முன்னேற வழி எங்கேயிருக்கிறது என்று நாம் யோசித்துப் பார்க்க வேண்டும். இப்பொழுதுள்ள நிலைமைப்படி எத்தனை வருடங்கள் ஆனாலும் நம் நாடு முன்னேற முடியாது, அதற்கு வழியும் கிடையாது. அடுத்தபடி, தொழில் அபிவிருத்தி போர்ட் என்று ஒன்றை ஏற்படுத்தி, மாவட்ட வாரியாக என்னென்ன பொருள்கள் கிடைக்கும், என்னென்ன தொழில்கள் ஆரம்பிக்கலாம் என்றெல்லாம் ஆராய்ந்து சர்க்காருக்கு சிபார்சுகள் செய்கிறார்கள். ஆனால் இந்த தொழில் அபிவிருத்தி போர்ட், சர்க்காரின் நிதி நிலைமை இவைகளை எல்லாம் மனதில் வைத்துக் கொண்டுதான் அதன் சிபார்சை கொடுக்கிறார்களே தவிர வேறொன்றுமில்லை. உதாரணமாக, ஒரு மாவட்டத்தில் **10** தொழில் நிலையங்கள் ஏற்படுத்தலாம் என்கிற வாய்ப்பு இருக்கும்போது அந்த **10** தொழிற் நிலையங்களையும் ஆரம்பியுங்கள் என்று அவர்கள் சொல்வதில்லை. ஏன் ? அதற்கு அவர்கள் சொல்லும் காரணம், நிதி நிலைமை சரியில்லை என்பதுதான். ஏன் நிதி நிலைமை சரியாகவில்லை என்றால் அதற்கு நாங்கள் சொல்லும் காரணந்தான் குறுக்கே நிற்கிறது. ராமனாதபுரம் மாவட்டம் பஞ்சப் பிரதேசம் என்று அனைவராலும் கருதப்படுகிற ஒரு மாவட்டமாகும். ஆனால் ராமனாதபுரம் மாவட்டம் இன்றிருக்கிற ஆட்சியின் காரணமாகத்தான் பஞ்சப் பிரதேசமாக இருக்கிறதே தவிர உண்மையில் அந்த மாவட்டம் ஒரு பஞ்சப் பிரதேசமல்ல. அங்கு, கோடிக்கணக்கான டன் ஜிப்ஸம் கிடைக்கிறது. அதை தொழில் அபிவிருத்தி போர்ட் பரிசீலனை செய்து அங்கு ஒரு சிமெண்ட் தொழிற்சாலை ஆரம்பிக்கப் போகிறார்கள். நன்றி. மகிழ்ச்சி. அதேபோல், அங்கு கடல்பாசி நிறையக் கிடைக்கிறது, கடலில். அந்தக் கடல் பாசியைக் கொண்டு " அகர் அகர் " என்ற உணவுப் பொருளை தயாரிப்பார்களேயானால், அதனால் வருடம் ஒன்றுக்கு எழுபது லட்சம் மக்களுக்கு உணவு கொடுக்கமுடியும். அந்த கடல் பாசியை வெளி நாடுகளுக்கு ஏற்றுமதி செய்யலாம். அது, ஆஸிட் செய்ய உதவுமாதலால் அவை வெளி நாடுகளுக்கு ஏற்றுமதி செய்யலாம். அப்படி செய்வதின் மூலம் நமக்கு ஸ்டர்லிங் கிடைக்கும். அதேபோல் ராமனாதபுரம் மாவட்டத்தில் இருந்து கிடைக்கிற சங்குகளை வங்காளத்திற்கு சுமார் **40,000** ரூபாய்க்கு ஏற்றுமதி செய்கிறோம். வங்காளத்தில் அதற்கு ஒரு தொழிற்சாலை ஏற்படுத்தி அதைக் கொண்டு பல சாமான்கள் செய்து விற்கிறார்கள். சுமார் இரண்டேகால் கோடி ரூபாய்க்கு அவர்கள் சாமான்கள் செய்து விற்கிறார்கள். நான் சொல்வது என்னவென்றால், அப்படி அவைகளை ஏற்றுமதி செய்யாமல், அதற்கு என்று ஒரு தொழிற்சாலை ஏற்படுத்தி நம் ஆட்களை வைத்துக்கொண்டு சங்கால் என்னென்ன சாமான்கள் செய்ய முடியுமோ அவைகளை செய்து அந்த இரண்டேகால் கோடி ரூபாயை நாம் பெறலாமே. அதுபற்றி தொழில் அபிவிருத்தி போர்ட் சிபார்சு செய்யவில்லை. ஏன் ? நிதி நிலைமை சரியாக இல்லாததால் என்று சொல்கிறார்கள். நாம் இருவரும் சேர்ந்து இருக்கும் வரையில் நம் நிதி நிலைமை சரியாகப் போவதில்லை. " ஸர்க்கோ சான்ட் " **(Zirconsand)** அங்கு கிடைக்கிறது. சீர்கோனியம், சிரோனியம் அணுகுண்டு உற்பத்தி செய்ய, அணுவை உருக்க உபயோகப்படுத்துகிறார்கள். இது எத்தனை டிக்கிரி உஷ்ணத்தினாலும் இளகாது. ஒரு பவுண்டு மண்ணின் விலை எழரை லட்சம் டாலர். பின், கடல் ஆமைகள் ராமேஸ்வரம், கீழக்கரை, தொண்டி போன்ற இடங்களில் அதிகம் கிடைக்கிறது. வெளிநாடுகளில் கடல் ஆமை இறைச்சியின் விலை, ஒரு பவுண்டிற்கு **75** ரூபாயாகும். அதன் ஓடுகள், ஆமை ஓடுகள் வெளிநாட்டிற்கு ஏற்றுமதி செய்யப்பட்டு அதனால் கண்ணாடிப்ப்ரேம், பேன்சி கூட்ஸ் **(fancy goods)** எல்லாம் செய்யப்பட்டு வருகிறது. ஆனால் அப்படி அவைகளை உற்பத்தி செய்ய ஒரு தொழிற்சாலை

அமைக்க நம் நிதி நிலை சரியாக இல்லை. காரணம் நம் பணம் எல்லாம் வடக்கே போகிறது. அடுத்தபடியாக, நமது நிதியமைச்சர் அவர்கள் கூறுகிறார்கள், நமது அன்னியச் செலாவணிப் பற்றாக்குறைக்கு காரணம் உணவுப் பற்றாக்குறை என்கிறார்கள். அதுவும் தவறு. நேற்று எனது நண்பர் மதிப்பிற்குரிய எம். பி. சுப்ரமண்யம் அவர்கள் எடுத்துச் சொன்னார்கள், உணவு பிரச்னையைப்பற்றி. அதாவது அமைச்சர் அவர்களின் புள்ளி விவரங்கள் தவறு என்று சொன்னார்கள். அதை அமைச்சர் அவர்கள் மறுக்கவில்லை. உண்மைக்கு மாறானதாக இருந்தால் அதை அவர் மறுத்திருப்பார். அன்னிய செலாவணிப் பற்றாக்குறைக்கு காரணம், உணவுப் பற்றாக்குறை என்று அமைச்சர் சொல்லி இருப்பதும் தவறு. அன்னியச் செலாவணிப் பற்றாக்குறைக்கு காரணம் உணவுப் பற்றாக்குறையல்ல. 1952-ல் இருந்த மத்திய சர்க்கார் வர்த்தக இலாகாவே தான் அதற்கு காரணம். வேறு யாரும் இல்லை. வர்த்தக இலாகாவின் மந்திரியாக இருந்த, நாம் மதிப்பு கொடுக்கிற, நாம் நன்றி தெரிவிக்கிற, டி. டி. கிருஷ்ணமாச்சாரியார்தான் அதற்கு காரணமே தவிர வேறு யாரும் இல்லை. 1952-ல் வர்த்தகத் துறையில் வெளி நாடுகளில் இருந்து இறக்குமதியை தாராளமாக திறந்து விட்டார்கள். யார் எதை வேண்டுமானாலும் இறக்கலாம் என்று ஆகிவிட்டது. அவசியம் இல்லாத சாமான்களைக்கூட இறக்குமதி செய்யலாம் என்று இறக்குமதியை திறந்துவிட்டார்கள். ஆனால் அப்பொழுது, 1952-ல் இருந்த சூழ்நிலை என்ன? சர்க்காரிடம் முதல் ஐந்தாண்டுத் திட்டம், இரண்டாவது ஐந்தாண்டுத்திட்டம், என்று திட்டங்கள் எல்லாம் முன் இருக்கும்போது வர்த்தக இலாகா அமைச்சர், ஐந்தாண்டுத் திட்டங்களுக்கு சாமான்கள் இறக்குமதி செய்யவேண்டுமென்பதை மறந்துவிட்டு தேவையில்லாத பொருள்களைக்கூட இறக்குமதி செய்துவிட்டதால் தான் அன்னிய செலாவணிப் பற்றாக்குறை ஏற்பட்டதே தவிர உணவுப் பற்றாக்குறையால் அல்ல. அதை நான் நிரூபிக்க முடியும். அமைச்சர் அவர்களால் முடியாது. (கனம் ஸ்ரீ லி. சுப்பிரமணியம் : என்னால் முடியாது.) உண்மையை எப்படி மறுக்க முடியும். வடக்கு தெற்கு என்று நாங்கள் பேசுவதை தவறாக நினைக்கக்கூடாது. இந்த ஏற்றுமதி இறக்குமதி பாலிஸி மத்திய சர்க்காரால் ஆறு மாதத்திற்கு ஒரு தடவை வெளியிடப்படுகிறது. என்னென்ன பொருள்கள் ஏற்றுமதி செய்யவேண்டும், எதெது இறக்குமதி செய்யவேண்டும் என்று "ரெட்புக்" என்று சொல்லப்படும் இறக்குமதி பாலிஸி புக்கில் வெளியிடப்படுகிறது. இதை மத்திய சர்க்கார் இந்த ராஜ்ய சர்க்காரோடு கலந்துதான் செய்கிறார்களா? நான் திட்டமாகச் சொல்வேன், கிடையாது என்று. ஒரு நாட்டினுடைய இறக்குமதி ஏற்றுமதி கொள்கைகளைப் பற்றி குறிப்பிடும்பொழுது அந்தந்த ராஜ்ய சர்க்கார்களைக் கலந்து கொண்டு வெளியிட வேண்டும். அப்படி வெளியிட்டால் தான் பொருத்தமாக இருக்கும். அன்னிய செலாவணி குறைவாக இருக்கிறது என்பது மத்திய சர்க்காரைப்பற்றியதாக இருக்கலாம். இருந்தாலும்கூட நம்முடைய முன்னேற்றத்தை இது எவ்வளவு தூரம் பாதிக்கிறது, நம்முடைய நிலைமை பாதிக்கப்படாத வகையில் நிதி நிலைமை இருக்கவேண்டும் என்று இந்த சர்க்கார் மத்திய சர்க்காரை வற்புறுத்த வேண்டும். இன்றைக்கு நடைமுறை என்னவென்றால் அவர்கள் சொல்லுவதை தான் இவர்கள் கேட்க வேண்டுமே தவிர இவர்களுக்கு அங்கு ஒன்றும் சொல்ல முடியாது. இந்த நிலைமையில் தான் நாடு இருக்கிறது. ஆகவே தான் இந்த நாட்டுப்பணம் எல்லாம் வடக்கே போகக்கூடாது என்று நாங்கள் சொல்லுகிறோமே தவிர வேறு ஒன்றுமில்லை. உணவுப் பொருட்கள் சம்பந்தமாக நிதி அமைச்சர் அவர்கள் சொன்னது தவறு என்று எங்கள் கட்சி அங்கத்தினர் சுப்பிரமணியம் அவர்கள் எடுத்துச் சொன்னார்கள். அரிசி விலை குறைந்து விட்டது, இனிமேல் நியாயவிலைக் கடைகள் அவசியமில்லை என்றும் அதை மூடிவிடப்போவதாகவும் கனம் அமைச்சர் பக்தவத்சலம் அவர்கள் இந்த மன்றத்தில் சொன்னார்கள். ஆனால் நிலைமை என்ன? இன்றைக்கும் உணவுப் பொருள்களின் நிலை சீர்கேடான நிலையில் தான் இருந்துகொண்டிருக்கிறது என்பதை நான் நிரூபிக்க முடியும். நம்முடைய ரயில்வே நிலையத்தில் அரசாங்கத்தால் பல ஹோட்டல்கள் நடத்தப் படுகின்றன. அவைகளில் திருச்சியிலும் ஈரோட்டிலும் நடத்தப்படுகிற ஹோட்டல்களில் டிசம்பர் 26-ந் தேதியிலிருந்து அளவு சாப்பாடு 10

3–10 p.m.

4th March 1958] [Sri A. V. P. Asaithambi]

அணுவுக்கு போட்டு வருகிருர்கள், என்று சொன்னுல் இதற்கு என்ன பொருள் ? உணவு நிலைமை சரியாகிவிட்டது என்று சொல்லிவிட முடியுமா ? இந்த நிலைமையில் நியாயவிலைக் கடைகளை மூடுவது நியாயமா என்று கேட்கிறேன். இதை நியாயம் தான் என்று நாங்கள் ஒப்புக் கொள்ள முடியாது. இந்த அளவில் சர்க்கார் எந்த வகையிலும் எதையும் நடுநிலைமையாக நின்று யோசிக்காதபடி, நாங்கள் எதோ வேண்டுமென்று வடக்கு தெற்கு என்று பேசுவதாக நினைத்துக்கொண்டு அதற்கெல்லாம் எதோ பலவிதமான காரணங்களை சொல்லி பதிலளிக்கிருர்கள். உண்மையிலேயே இவர்களோடு ஒத்துழைக்க வேண்டுமென்றுதான் நாங்கள் நினைக்கிறோம். ஒத்துழைக்க நாங்கள் தயாராய் இருக்கிறோம். ஆனுல் அதற்கான முறையில் இவர்கள் நடந்து கொள்வது இல்லை. சமீபத்தில் சிறு சேமிப்புத் திட்டத்தை எழுப்பினுர்கள். இதை கொண்டு வருவதற்கு முன்பு எங்கள் கட்சித் தலைவர்களை கலந்து இதைப்பற்றி பேசினுர்களா என்று பார்த்தால் அதையும் காணேம். நாங்கள் எதோ இவர்களுக்கு வெளியில் இடைஞ்சலாக இருக்கிறோம் என்று மாத்திரம் சொல்லிக்கொண்டிருக்கிருர்களே தவிர வேறு ஒன்றுமில்லை. (மணியடிக்கப்பட்டது.) எனவே தான் இந்த நாட்டினுடைய முன்னேற்றம் எந்த மாதிரியாக நாம் நடந்து கொண்டால் ஆகும் என்பதையும் இந்த நாட்டில் சுபீட்சம் எந்த விதத்தில் சரியாக பரவும் என்பதையும் நாங்கள் பல முறை ஒருவர்க்கொருவர் ஒன்று சேர்ந்திருந்து ஆலோசித்து முடிவு செய்திருக்கிறோம். முதலில் இந்த நாட்டிலிருந்து ஒரு பைசாக்கூட வெளியே போகக்கூடாது. அதற்கு ஒரு தடுப்பு வேண்டும். அதாவது இந்த ராஜ்ய எல்லையில் ஒரு அணை கட்ட வேண்டும். அந்த தடுப்புதான் எங்களுடைய கோரிக்கையே தவிர வேறு மோசமான கோரிக்கை ஒன்றும் கிடையாது. ஆனுல் எதோ வட நாட்டை பிரிக்கச் சொல்வது அபாயத்தை விளைவிக்கும் என்று சொல்லுகிருர்கள். எதோ வட நாட்டிலுள்ள தமிழர்கள் எல்லாம் இங்கே வரவேண்டியிருக்குமே என்று கவலைப்படுகிருர்கள். அவ்விதம் கவலைப்படவேண்டிய தேவையேயில்லை. இங்கிருக்கக் கூடிய வட நாட்டவர்களை அங்கே அனுப்பிவிட்டால் தமிழர்கள் வந்தால் அவர்களை இங்கே வைத்துக்கொள்ளலாம். இதனுல் கவலைப்படவேண்டிய தேவையில்லை. இந்த நாட்டில் நமக்கு எல்லாச் செல்வங்களும் இருக்கின்றன. எல்லோருக்கும் நல்லமுறையில் வீடு, எல்லோருக்கும் உணவு, எல்லோருக்கும் உடை, இவ்விதமாக எல்லா வசதிகளையும் நிச்சயமாக செய்து கொடுக்க முடியும். அது எப்பொழுது என்று கேட்டால் இங்கிருந்து ஒரு பைசா கூட வடநாட்டிற்கு போகாதபடி தடுக்கப்படவேண்டும். அன்றைக்குத்தான் இவைகளைச் செய்ய முடியும். அந்த மாதிரியான நிலை கூடிய சீக்கிரம் வரவேண்டும். நிதி அமைச்சர் அவர்களுடைய பட்ஜெட் அறிவிப்பை பார்த்தால் திராவிட நாடு தனியாக பிரிக்கப்பட வேண்டுமென்ற கொள்கையை தீவிரப்படுத்துங்கள் என்று சொல்வதாகத் தான் அமைந்திருக்கிறது என்பதை தெரிவித்துக்கொண்டு முடித்துக் கொள்கிறேன். வணக்கம்.

SRI S. LAZAR : A clarification, Sir. . . .

MR. SPEAKER : No, no. The hon. Member can speak when he has the oppertunity.

SRI S. LAZAR : Just an elucidation from the hon. Member who just now spoke, Sir.

MR. SPEAKER : How can you raise a point of information now ?

SRI S. LAZAR : It is always open to a Member to ask for a clarification, Sir. கனம் அங்கத்தினர் அவர்கள் பேசுகின்ற பொழுது ஒரு சில புள்ளி விவரங்களை ஆயிரக்கணக்கிலும் கோடிக்கணக்கிலும் கொடுத்தார்கள். இவைகளுக்கெல்லாம் ஆதாரம் இருக்கின்றதா ?

[Sri S. Lazar] [4th March 1958

இவைகளை எதிலிருந்து கொடுத்தார்கள் என்பதை தெரிந்துகொள்ள ஆசைப்படுகிறேன். அல்லது அவருடையச் சொந்த ஆராய்ச்சியின் பலனைகத் தான் இவைகளை தெரிவித்தார்களா ?

**Sri T. K. SUBBIAH :** கனம் சபாநாயகர் அவர்களே, இந்த ஆண்டு நிதி அறிக்கையை சமர்ப்பித்த நிதி அமைச்சர் அவர்களுக்கு எனது வணக்கத்தை தெரிவித்துக்கொள்கிறேன். சபாநாயகர் அவர்களே, நாட்டு மக்களுக்குவேண்டி சர்க்காரால் திட்டம் போடப்பட்டு வரும்பொழுது மக்கள் அதனால் பாதிக்கப்படாத நிலைமையில் . . .

**Mr. SPEAKER :** சபையில் சப்தம் அதிகமாக இருக்கிறது. கனம் அங்கத்தினர் பேசுவது எனக்கு சரியாக கேட்கவில்லை. ஆகையால் மற்ற அங்கத்தினர்கள் கூடியவரையில் பேசாமல் இருந்தால் நல்லது. அப்படி பேச வேண்டுமென்றால் மெதுவாக பேசவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

**Sri T. K. SUBBIAH :** இந்த நிலைமையில் எந்த சமூகத்தினரும் கஷ்டநஷ்டமடையாத வகையில் திட்டமிடப்பட்டு வகுத்த நிதி அறிக்கை இன்று நம் முன் வந்திருக்கிறது. நான் அதை பாராட்டுகிறேன். குறிப்பாக விவசாயத்துறையில் இந்த சர்க்கார் எவ்வளவு தூரம் ஆழ்ந்த அக்கரை காட்டியிருக்கிறது என்பதை பார்க்கும்பொழுது விவசாயத்திற்கு வேண்டி இந்த சர்க்கார் மிகவும் அக்கரை காட்டி வருவது தெள்ளத் தெரிய வருகிறது. குறிப்பாக புள்ளம்பாடி வாய்க்கால் கட்டி அதன் மூலமாக 1960-ம் ஆண்டிற்குள் 27 ஆயிரம் ஏக்கர்கள் சாகுபடி செய்ய முடியும் என்று சர்க்கார் எதிர்பார்க்கிறார்கள். நான் சொல்வது 1960-க்கு முன்பாகவே அதாவது ஒரு ஆண்டுக்கு முன்பாகவே அதில் அதிகமான முன்னேற்றத்தை காணமுடியும் என்பதையும் 1959-வது ஆண்டிலேயே இதிலிருந்து நீர்ப்பாசன வசதி கிடைக்கும் என்பதையும் சொல்லிக்கொள் கிறேன். (இச்சமயத்தில் டாக்டர் ஸ்ரீமதி சத்தியவாணிமுத்து அவர்கள் தலைமை வகித்தார்கள்.) இதில் அதிகமான ஏரிகள் அமைக்கப்பட்டு வரு கின்றன. சில ஏரிகளில் வேலை பூர்த்தி அடைந்திருக்கிறது. இந்த ஆண்டு சரியாக பருவ மழை இருக்குமானால் 1959-வது ஆண்டிலேயே நிலத்தை சாகுபடி செய்ய முடியும் என்று நம்புகிறேன். இந்த நிலையில் முன்னேற்றம் அடைந்திருக்கிறது. அடுத்தபடியாக விதைப் பண்ணைகளை அதிகமாக ஏற்படுத்த வேண்டும் என்றும் அவைகளை கோவில் நிலங்களை எடுத்து அங்கு அமைத்துக் கொள்ளவேண்டுமென்றும் பல தடவை சொல்லியிருக்கிறோம். ஆனால் இது 60—40 போன்ற சிக்கல்களினால் சில கோவில் நிலங்களை எடுத்துக்கொள்ள முடியாத நிலைமை ஏற் பட்டிருக்கிறது. அதற்கு உடனடியாக ஏதாவது அவசர சட்டங்கள் கொண்டு வந்து சீக்கிரமாக அதை நடைமுறைக்கு கொண்டு வந்தால் சீக்கிரமாகவே நாம் குறிப்பிட்ட விதைப் பண்ணைகளை ஏற்படுத்த முடியும். இதை செய் வதற்கு அரசாங்கம் நடவடிக்கை எடுக்கவேண்டுமென்று கேட்டுக்கொள் கிறேன். அடுத்தபடியாக நமது காடுகள் அபிவிருத்தி அடைய வேண்டி யது மிக அவசியம். நண்பர்கள் பலர் முந்திரி காடுகளைப்பற்றி பேசி னார்கள். முந்திரி வளர்ப்பதற்கு இப்போது கால நிலை சரியாக இருக் கிறது. குறிப்பாக உடையார்பாளையம் பகுதியில் காடுகள் நிறைந்த பிரதேசமாக இருந்தது இப்போது புல் வெளியாக கிடக்கிறது. அந்த பகுதியில் முந்திரியை வளர்த்தால் நல்ல முன்னேற்றம் அடைய முடியும். இதற்கு வேண்டி அரசாங்கம் ஒரு காரியத்தையும் செய்ய வேண்டும். அதாவது இந்த நிலங்களை நிலம் இல்லாத விவசாயிகளுக்கு 3 அல்லது 4 ஆண்டுகளுக்கு இந்த முந்திரியை வளர்க்கும்போது இடைக்காலத்தில் வரகு போன்றவைகளை பயிர் செய்து கொள்ளலாம் என்று ஒரு அறிவிப்பு கொடுப்பார்களானால் சர்க்காருக்கு விதை கொடுக்கவேண்டிய செலவைத் தவிர வேறு ஒன்றும் இருக்காது. இதனால் ஆயிரக்கணக்கில் முந்திரி காடுகளை சாகுபடி செய்ய முடியும் என்பதை சொல்ல ஆசைப்படுகிறேன்.

3–20 p.m.

அடுத்தபடியாக, கைத்தறி முன்னேற்றத்திற்காக மிகவும் பாடுபடவேண் டியது அவசியம். சில நண்பர்கள் சொன்னார்கள், இந்தக் கைத்தறித் துணிகளை சர்க்கார் கொள்முதல் செய்து வெளிநாட்டுக்கு அனுப்பவேண்டும் என்று. நான் சொல்லுகிறேன், சர்க்கார் கொள்முதல் செய்யக்கூடாது.

ஏனென்றால் சர்க்கார் கொள்முதல் செய்வதென்றால் தொழில் அனுபவம் இல்லாத அதிகாரிகள் பன்னாடை போன்ற துணிகளை அதிக விலை கொடுத்து வாங்கி வெளி நாடுகளுக்கு அனுப்ப நேரிடும். அதனால் கைத்தறியின் தரம் குன்றிவிடும். ஆகையால் கைத்தறி சொஸைடிகளுக்கு ஏற்றுமதி லைஸென்ஸ் வழங்க ஏற்பாடு செய்தால் வெளி நாடுகளுக்கு அனுப்ப ஏதுவாகும்.

அடுத்தபடியாக, சுகாதாரத்தைப் பொறுத்தமட்டில் ஒரு சில வார்த்தைகள். குறிப்பாக இன்றைக்கு பிரைமரி ஹெல்த் ஸெண்டர்கள் கிராமங்களில் ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. ஏற்படுத்தப்பட்ட கிராமங்களில் டாக்டர்கள் செல்வதற்கு வாகன வசதிக்காக ஜீப் கார் கொடுப்பதற்கு ஏற்பாடு செய்வதாக இருந்தது. எனக்குத் தெரிந்த மட்டில் ஜீப் வரமுடியாத கிராமத்தில் எந்த விதமான அபிவிருத்தியும் செய்ய முடிவதில்லை. அதுமட்டுமல்ல. பிரைமரி ஹெல்த் ஸெண்டர் கட்ட 40,000 ரூபாய் செலவு செய்யவேண்டியிருக்கிறது. அதில் 30,000 ரூபாய் கிராம மக்கள் நன்கொடையாகக் கொடுக்க இயலாது இருக்கிறார்கள். பிரைமரி ஹெல்த் ஸெண்டர்களுக்கு அதிகத் தொகை ஒதுக்கி, 40,000 ரூபாயையும் சர்க்காரே போட்டுக்கட்டிக் கொடுத்தால் நல்லது, அதில் நான்கில் மூன்று பாகத்தை சர்க்கார் போட்டு, மீதி நான்கில் ஒரு பாகத்தை கிராம மக்கள் கொடுக்க வேண்டுமென்று செய்தாலும் நல்லது.

அடுத்தபடியாக, தேசீய விஸ்தரிப்புப் பகுதியிலே, உயர்நிலைப் பள்ளி விஷயத்தில் ஒரே பள்ளிக்குக் கட்டிடம் கட்ட பணம் கொடுக்கச் சட்டம் இருக்கிறது. பத்தாயிரம் ரூபாயில் பள்ளிக்கூடத்தைக் கட்டிவிட்டு, அடுத்த கிராமத்தில் பள்ளிக்கூடம் கட்டப் பணம் கொடுக்க வசதியில்லை. முன்னால், லோகல் டெவலப்மென்ட் ஸ்கீம்படி பணம் கொடுக்கும் நிலைமை இருந்த போது பல பகுதிகளில் பல உயர்நிலைப் பள்ளிகள் கட்ட ஏதுவாக இருந்தது. தேசீய விஸ்தரிப்புத் திட்டப் பகுதியில் ஒரு கிராமத்தில் ஒரு பள்ளிக்கூடம் ஏற்படுத்திவிட்டால் பக்கத்திலுள்ள கிராமங்களுக்குப் பள்ளிக்கூடமில்லாமல் அந்த கிராமங்கள் முன்னேற முடியாமல் இருக்கிறது. அந்தப் பகுதிகளில் ஒரு பள்ளிக்கு 10,000 ரூபாய் தேசீய விஸ்தரிப்பு நிதியிலிருந்து கொடுத்து விட்டு, மற்றத் துறையிலிருந்து பாக்கிப்பணம் வழங்க ஏற்பாடு செய்தால் அந்தப் பகுதிகள் முன்னேற வழி ஏற்படும்.

அடுத்தபடியாக, ஹரிஜனங்களுக்கு ஒதுக்கும் பணம், காலனி அமைக்கும் முறையில், மார்ச் மாதத்திற்குள் காலனி கட்ட வேண்டிய நிலைமை இருக்கும்போது, ஜனவரி மாதத்தில் வேலை துவங்க நேரிடுகிறது. இரண்டு, மூன்று மாதத்தில் நிலத்தை ஆர்ஜிதம் செய்வதிலிருந்து, சர்வே செய்து, கட்டிடம் கட்டவேண்டிய நிலைமை ஏற்படுகிறது. மூன்று மாதத்தில் கட்ட வேண்டியிருப்பதால் அஸ்திவாரம்கூட பலப்படாது கட்டவேண்டியிருக்கிறது. ஆகையால் ஹரிஜன இலாகாவினர் ஆண்டு முதலிலேயே செலவு செய்வதைப்பற்றித் திட்டமிட்டு, காலனி கட்ட ஏற்பாடு செய்தால் சௌகரியமாக இருக்கும்.

அடுத்தாற்போல், ஹரிஜனங்களுக்கு மாடுகள் வாங்க 250 ரூபாய் பணமும், 35 ரூபாய் ஏர், கலப்பை வாங்கவும் கொடுக்கப்படுகிறது. மொத்தமாக 285 ரூபாயை அவர்களுக்கே கொடுத்துவிட்டால் சௌகரியமாக இருக்கும். முப்பத்தைந்து ரூபாயை காண்டிராக்ட் மூலமாகக் கலப்பை வாங்கி அவர்களுக்குக் கொடுத்தால் அது உழாக் கலப்பையாகப் போய்விடக்கூடிய நிலைமை இருக்கிறது. ஆகையால் அதைத் தொகையாகக் கொடுக்கவேண்டும்.

அடுத்தபடியாக, இந்தச் சாலைகள் அமைப்பில் பல பகுதிகளில் புதிதாகப் பாலங்கள் கட்ட ஏற்பாடாகி வருகிறது. குறிப்பாக, திருமானூர், விளாங்குடி மத்தியிலுள்ள கொள்ளிடத்தில் பல பாலம் அமைக்க இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் சேர்க்கப்பட்டிருந்தும், பல்லாண்டு காலமாக முறையிடப்பட்டிருந்தும், இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் சறுக்குப் பாலம் கட்ட ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. இந்த ஆண்டில் நிதி ஒதுக்கப்படாத நிலை இருக்கிறது. அடுத்த ஆண்டில் அதை எடுத்து

[Sri T. K. Subbiah] [4th March 1958

அந்தப் பாலத்தை அதிக காலதாமதிக்காமல் உடனடியாகச் செய்து முடிக்கவேண்டுமென்று கேட்டுக் கொண்டு என் உரையை முடித்துக் கொள்கிறேன்.

*Sri N. V. CHOCKALINGAM : தலைவர் அவர்களே, இந்த நிதி நிலை அறிக்கையை ஆமோதித்து சில வார்த்தைகள் சொல்ல விரும்பு கிறேன். இந்த நிதி நிலை அறிக்கையில் எல்லா விஷயங்களும் நல்ல முறையில் அமைக்கப்பட்டிருக்கின்றன. இதைப்பற்றி அதிகமாக நான் சொல்ல விரும்பவில்லை.

தேவக்கோட்டை டிவிஷன், திருப்பத்தூர் தாலூகாவில் விவசாயம் அதிகம் இருக்கிறது. இன்றைக்கு அங்கு பல வாய்க்கால்கள், கண்மாய் கள் மராமத்து செய்வதில் கால தாமதம் ஏற்பட்டிருக்கிறது. அவைகளை நல்ல முறையில் சீர்படுத்தினால், அங்குள்ள விவசாயிகள் மிகவும் நல்ல முறையில் விவசாயம் செய்ய முடியும் என்று சொல்லிக்கொள்ள விரும்பு கிறேன். திருப்பத்தூர் தாலூகாவில் விவசாயம் முன்னேறவேண்டுமானால், பல இடங்களில் டாம் கட்டி அந்த முறையில் விவசாயத்தை அபிவிருத்தி செய்வதற்கு மக்களுக்கு உதவி அளிக்கவேண்டும். அங்கு சில காட்டாறு கள் இருக்கின்றன. நான்கு, மூன்று இடங்களில் சிறு அணைக்கட்டுகள் கட்டினால் விவசாயம் முன்னேற வழியேற்படும். அதனால் உணவு உற்பத்தியும் பெருகும். அந்த ஆறுகள் கிழக்கு நோக்கி ஓடுகின்றன. இப்போது அங்கு மக்கள் கஷ்டப்படவேண்டிய நிலை ஏற்பட்டிருக்கிறது. சென்ற பட்ஜெட்டில் இதைப்பற்றி இந்தச் சபையில் சொன்னேன். இது வரையில் எந்த நன்மையும் செய்யவில்லை. இந்த வருஷம் விவசாயம் ஓரளவு பாதிக்கப்பட்டிருக்கிறது. ஆகஸ்ட் மாதத்தில் ஒரு மழை பெய்தது. பிறகு $1\frac{1}{2}$ மாதத்திற்கு மழை இல்லை. நடவு நட்டிருந்ததால் 45, 40 நாட்கள் காய்ச்சல் இருந்து கண்டுமுதல் சரி ஆகவில்லை. அங்குள்ள மக்கள் மிகவும் சிரமப்படுகிறார்கள். பின்னால் டிஸம்பர் மாதத்தில் ஒரு மழை பெய்தது. மழை காரணமாக இப்போது சில பகுதிகளில் நாற்று நட ஏற்பாடு செய்துகொண்டிருக்கிறார்கள். காட்டாறுகள் இருப்பதால் திடீ ரென மழை பெய்யும் காலத்தில் தண்ணீர் பெருக்கெடுத்து ஓடுகிறது. அந்த கண்மாய்களுக்குக் குறுக்கே அணைகள் போட்டால் விவசாயம் செய்வது சாத்தியமாகும். இதனால் பல ஆயிரக்கணக்கான ஏக்கர் நிலங் களில் 3 போகம் சாகுபடி செய்ய முடியும். ஆகையால் சிறு அணைகள் கட்ட ஏற்பாடு செய்யவேண்டுமென்று சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். இதனால் விவசாயிகளுக்கு மிக அனுகூலமாக இருக்கும், அவர்கள் சந்தோஷப்படுவார்கள், உணவு உற்பத்தியும் பெருகும் என்று சொல்லிக் கொள்ள விரும்புகிறேன்.

தேவக்கோட்டை டிவிஷன், திருப்பத்தூர், சிவகங்கை, திருவடானை என்ற மூன்று தாலூகாக்களைக் கொண்டது. திருவாடானை தாலூகாவில் சேர்ந்தது தேவக்கோட்டை. தேவக்கோட்டையில் முன்சீப் கோர்ட், சப்-கோர்ட் இரண்டும் இருக்கிறது. சிவகங்கையில் முன்சீப் கோர்ட், சப்-கோர்ட் இரண்டும் இருக்கிறது. திருப்பத்தூரில் மற்ற தாலூக்காக்களை விட அதிக ஜனத்தொகை இருக்கிறது. அங்கு இவ்வளவு காலமாக முன்சீப் கோர்ட் இல்லையென்று சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். பல முறைகள் சர்க்காரிடம் தெரியப்படுத்தியும், பிரிட்டிஷ் காலத்திலேயே பல முயற்சிகள் செய்தும்கூட அங்கு முன்சீப் கோர்ட்டுகள் வராத காரணம் தெரியவில்லை. இப்போது 50 மைல்களுக்கு அப்பாலுள்ள பல கிராமங் களிலிருந்து, தேவக்கோட்டை, சிவகங்கை முதலிய இடங்களுக்குச் சென்று கேஸ் நடத்தவேண்டியிருக்கிறது. பிரிட்டிஷ்காரர் காலத்தில் வேண்டு மென்றே ஏற்படுத்தாமலிருந்திருக்கலாம். ஆனால் அந்த சந்தர்ப்பத்தி லும் கால தாமதப்படுத்துவது அவ்வளவு சரியல்ல என்று சொல்லிக் கொள்ள விரும்புகிறேன்.

அடுத்தபடியாக விருசிலையாறு என்று திருப்பத்தூருக்கருகில் இருக் கிறது. அதன் குறுக்கே பாலம் கட்டுவதாகத் திட்டமிடப்பட்டிருப்பதாகக் கேள்விப்பட்டேன். இந்த பட்ஜெட்டில் அதைக் காணவில்லை. அதற்கான

4th March 1958] [Sri N. V. Chockalingam]

காரணம் தெரியவில்லை. அந்த ஆற்றில் வருஷத்தில் 4 மாதம் சுமார் விட்டு விட்டு 100 நாள் வரை போக்குவரத்து தடைபட்டுவிடும். அந்தப் பாலத்தை உடனடியாகக் கட்டாமல் இருப்பது கஷ்டமாக இருக்கிறது.

THE HON. SRI P. KAKKAN : எந்தப் பாலம் ?

SRI N. V. CHOCKALINGAM : கஜேந்திர மோட்சம் பாலம். சிங்கம் புணரி பிளாக்கில் லோன் கொடுக்கப்படுகிறது. கிணறுகள் வெட்டுவதற்காக இந்த லோன்கள் கொடுக்கப்படுகிறது. ஆனால் அவர்களிடத்தில் பம்பு செட் வாங்குவதற்கு கையில் பணம் இல்லை. அந்த மாதிரி 100 கிணறுகள் வெட்டப்பட்டிருக்கின்றன. பம்பு செட்டுகளுக்காக 6 அல்லது 10 வருஷ தவணைகளில் கடன் கொடுத்தால்தான், அந்தக் கிணறுகளிலிருந்து ஏதாவது பலனை அடையமுடியும் என்று சொன்னோம். அதிகாரிகளிடத்திலும் கண்டு நேரில் சொன்னோம். இன்னும் அவர்களுக்குக் கடன்கள் கொடுக்கப்படவில்லை. 3–30 p.m.

பிரான்மலைப் பகுதியில் விளைவேயில்லை. தண்ணீர் கிணறு வசதி கிடையாது. மழை பெய்யவில்லை. புயல், வெள்ளத்தின் காரணமாக ஆறுகள் கீழ் நோக்கி அறுத்துக்கொண்டு போய்விட்டன. குறுக்கு அணை கட்டினால்தான் தண்ணீர் பாயும். அங்கு வெள்ளாமையே இல்லை. நாம் செய்ய வேண்டிய வேலைகளில் எல்லாம் காலதாமதம் ஆகிறது. ஆகவே, பம்பு செட்டுகளை அடமானமாக வைத்துக்கொண்டு 6 வருஷ தவணைகளில் கடன் கொடுக்கும்படிக் கேட்டுக்கொள்கிறேன்.

தேசீய விஸ்தரிப்புத் திட்டத்தின் கீழ் " பிரைமரி ஹெல்த் சென்டர்கள் கள் " நடத்துகிறார்கள். ஒரு ஊரில் ஒரு டாக்டரை வைத்துக்கொண்டு, அவரின் கீழ் நாலைந்து சிப்பந்திகளையும் வைத்துக்கொண்டு, 20,000 ரூபாய் செலவில் ஒரு மோட்டார் வண்டி (van) வாங்கி, எல்லா கிராமங்களுக்கும் வாரத்திற்கு ஒரு முறை போகிறார்கள், உதாரணமாக, ஒரு கிராமத்தை எடுத்துக்கொண்டால், ஒரு சனிக்கிழமை அவ்வூருக்கு வந்தால், மறுபடியும் ஒரு வாரம் கழித்து அடுத்த சனிக்கிழமைதான் அங்கு திரும்பி வருகிறார்கள். இப்படி கிராமாந்திரப் பகுதிகளையெல்லாம் சுற்றி வருகிறார்கள். எதற்காக இந்த " பிரைமரி சென்டர்கள் " இருக்கின்றன என்று தெரியவில்லை. ஜனங்களுக்கு இது சுத்தமாகப் பிடிக்கவில்லை. இதற்காக ஆகும் செலவில், நான்கு அல்லது ஐந்து கிராமங்களுக்கு ஒரு ஆஸ்பத்திரி நிரந்தரமாக வைத்து நடத்தலாம். வாரத்திற்கு ஒரு முறை வந்தால், நோய்வாய்ப்பட்டிருக்கும் நோயாளிகளுக்கு 6 நாட்களுக்கு வேறு மருந்து ஒன்றும் இல்லாமல் மிகவும் அவதிப்படுகிறார்கள். காய்ச்சல் இதற்குள் அதிகமானால், யாரைக் கேட்டு மாற்று மருந்து வாங்கிக்கொடுப்பது ? ஆகையால் அங்கே இருக்கக்கூடிய ஜனங்களுக்கு இந்த சென்டர்கள் பிடிக்கவில்லை. தேசீய அபிவிருத்தித் திட்டத்தின் கீழ் இந்தமாதிரி சென்டர்களுக்கு அவசியமில்லை. அந்த டாக்டரைக்கூட நான் சந்தித்தேன். அவர்கூட வருத்தப்படுகிறார். " எங்கே போனாலும் குறை சொல்லுகிறார்கள், என்னை வேறு இடத்திற்கு மாற்றுவதற்கு வழி செய்யுங்கள் " என்று அவர் சொல்லுகிறார். ஆகவே, இந்த விஷயத்தை சர்க்கார் பரிசீலனை செய்யவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். இல்லை, இந்த மாதிரி சென்டர்கள் இருக்கத்தான் வேண்டுமென்று நினைத்தால், இருந்துவிட்டுப் போகட்டும்.

திருப்பத்தூர் தாலுகா பிற்போக்கான பிரதேசம். அதாவது, கிழக்குப் பகுதி பூராவும் ஓரளவு சுபிட்சமாக இருக்கிறது. அங்கே நகரத்தார் குடிகள் இருக்கின்றனர். ஆனால், மேற்குப் பகுதியில் விவசாயத்தைத் தவிர வேறு தொழில் கிடையாது. நெல், கேப்பை ஆகிய இரண்டு தான்யங்களைத்தான் அங்கே பயிரிடுகிறார்கள். ஒரு வெள்ளாமைக்குக் கூட தண்ணீர் வசதி இல்லாத பகுதி. கிணறுகள் தோண்டுவதற்கும் வசதியில்லாத பகுதி. கரும்போ, வெற்றிலையோ, எந்த விதமான விவசாயமும் கிடையாது. இப்படி இருந்தால் அங்குள்ள மக்கள் எந்த விதமான நிலையில் இருப்பார்கள் என்பதைப்பற்றி யோசிக்க வேண்டும். ஒரு நில அடமான பாங்கு ஏற்படுத்தி உரம், மாடுகள் வாங்குவதற்கு அவர்களுக்குக் கடன் கொடுக்க வசதி

செய்ய வேண்டும். பட்ஜெட் உரையில் மேலும் ஐந்து நில அடமான பாங்குகளை ஏற்படுத்தப் போவதாகத் தெரிகிறது. திருப்பத்தூர் தாலூகா வுக்கு ஒரு நில அடமான பாங்கு மிகவும் அவசியம். கனம் மந்திரி அவர்கள் குறிப்பில்கூட எழுதிக் கொண்டால் நலமாக இருக்கும். அங்கே ஒரு பாங்கை அமைக்க வேண்டுமென்று வற்புறுத்திச் சொல்லுகிறேன்.

பின் தங்கிய வகுப்பினருக்கு இப்பொழுது பலவிதமான சலுகைகள் அளிக்கிறார்கள். பின்தங்கிய வகுப்பைச் சேர்ந்த பல ஜனங்கள் இருக் கிறார்கள். ஒவ்வொரு ஜாதியையும் எடுத்து, அதிலுள்ள ஜனங்களின் எண்ணிக்கை விகிதாசாரத்தை அனுசரித்து பங்கீடு பண்ணிக் கொடுத்தால் நன்றாக இருக்கும். இப்பொழுது இருக்கிற நிலையில் நான்கு அல்லது பத்து பேருக்கு சலுகை அளித்தால் ஒரு குறிப்பிட்ட ஜாதியைச் சேர்ந்தவர் களுக்கு அளிக்கப்படுகிறது என்று சொல்லுகிறார்கள். ஆகவே, ஜனத் தொகை அடிப்படையில் சலுகை அளித்தால் நன்றாக இருக்கும்.

சிங்கம்புணரி பிளாக்கில் தேசீய விஸ்தரிப்புத் திட்டம் வந்து மூன்று வருஷம் ஆய்விட்டது. இரண்டு வருஷத்திலேயே திட்டம் வெற்றிகரமாக முடிந்துவிட்டது. சென்ற ஒரு வருஷமாக அதிகாரிகள் சும்மா இருக் கிறார்கள். சென்ற வருஷத்திலேயே இதைப்பற்றிச் சொல்லியிருக்கிறேன். அந்தப் பகுதியை சமுதாய நலத்திட்டத்தின்கீழ் கொண்டுவர வேண்டு மென்று சொன்னேன். இந்த வருஷத்திலாவது இதற்கு வேண்டிய நடவடிக்கை எடுக்கவேண்டுமென்று கேட்டுக்கொண்டு, என்னுடைய சிற் றுரையை முடித்துக்கொள்கிறேன்.

SRI K. R. NALLASIVAM: மதிப்பிற்குரிய சபைத் தலைவர் அவர்களே, இந்த பட்ஜெட்டைக் கொண்டுவருவதற்கு முன்னாலேயே, சென்ற சட்டசபைக் கூட்டத்தில், கவர்னர் அவர்கள் பிரசங்கத்திலே, நிலத்திற்கு உச்ச வரம்பு கட்டுவதுபற்றி ஒரு முடிவு செய்யப்படும் என்பன போன்ற வார்த்தைகள் சொல்லப்பட்டன. அவ்வாறு நடக்கும் என்று பலர் எதிர்பார்த்துக் கொண்டிருந்தார்கள். ஆனால் அவர்களுக்கெல்லாம் பெரும் ஏமாற்றமாகவே இப்பொழுது இந்த பட்ஜெட் உரை விளங்குகிறது. நிலச் சீர்திருத்தத்தை ஒத்திப்போட வேண்டும் என்ற வகையிலே, விவசாய வருமான வரி விதிப்பு கொண்டுவரப்பட்டிருக்கிறது. நிலப் பிரச்னையைப் பொறுத்த வரையில், ஒரே சமயத்தில் எல்லா விதமான முறைகளையும் ஒருமுகப்படுத்தி **"Comprehensive reform"** கொண்டுவந்தால்தான், விவசாயிகளுக்கும் சரி, நிலப் பிரபுக்களுக்கும் சரி, தொல்லை இல்லாமல் நாட்டினுடைய முன்னேற்றத்திற்கு உகந்ததாக இருக்கும். ஏதோ இரண்டு ஆண்டுகளுக்கு முன்னர், குத்தகையாளர் பாதுகாப்புச் சட்டம் வந்தது. மறுபடியும் ஒரு ஆண்டுக்குப் பின்னர் நியாயவாரச் சட்டம் வந்தது. இப்பொழுது விவசாய வருமான வரி விதிக்கப்படுகிறது. நிலத்திற்கு உயர்ந்தபட்ச வரம்பு எப்பொழுது வரும் என்று திட்டவட்டமாகச் சொல்ல முடியவில்லை. நாட்டிலே இருக்கின்ற எல்லாக் கட்சிகளும் நிலச் சீர் திருத்தத்தை ஒத்துக்கொள்கிற நிலையிலே, இன்று நம் சர்க்காருக்கு அதைக் கொண்டுவர எது தடையாக இருக்கிறது? காங்கிரஸ் ஸ்தாபன மும் நிலச் சீர்திருத்தத்தை ஒப்புக்கொள்கிறது. நிலச் சீர்திருத்தம் கொண்டுவருவதற்கு நாங்கள் யோசனை செய்துகொண்டிருக்கிறோம் என்று ஒவ்வொரு கூட்டத்திலேயும் சொல்வதைத் தவிர, உயர்ந்த பட்ச நில வரம்பு விதிப்பதற்கு எவ்வளவு காலமாகுமென்று திட்ட வட்டமாகச் சொல்லவில்லை. நிலச் சீர்திருத்தம் கொண்டுவராத நிலையில், நம் நாட்டில் விவசாயத் துறையில் குழப்பம்தான் நிலவும் என்பதை எல் லோரும் ஒப்புக்கொள்கிறார்கள். பின் எதுதான் தடையாக இருக்கிறது? திட்டம் தீட்டுவதற்கு இவ்வளவு நாட்கள் தேவையில்லை. பத்து, பதினைந்து ஆண்டுகளுக்கு முன்னரே, குமரப்பா கமிட்டி எப்படி இந்த சீர்திருத் தத்தை செய்ய வேண்டுமென்று தெளிவாக ஒரு ரிப்போர்ட்டை இன்றைய காங்கிரஸுக்குக் கொடுத்திருக்கிறது. நம் மாகாணத்தில் நியமிக்கப்பட்ட சுப்ரமணியம் கமிட்டியும் இதைப்பற்றி அபிப்பிராயம் சொல்லியிருக்கிறது. நம்மால் இதை வேகமாகச் செய்ய முடியவில்லை என்றால், பக்கத்திலே உள்ள ராஜ்யங்கள் என்னென்ன சீர்திருத்தத்தைக் கொண்டுவந்திருக் கின்றன என்று பார்க்கலாம். காஷ்மீரிலே நிலச் சீர்திருத்தம் அமலில்

4th March 1958] [Sri K. R. Nallasivam]

இருக்கிறது. கேரள ராஜ்யத்திலே இது சம்பந்தமான மசோதா வெளி வந்திருக்கிறது. இன்னும் சில ராஜ்யங்களிலே நிலச் சீர்திருத்தம் கொண்டுவந்திருக்கிறார்கள். காங்கிரஸ் பதவியிலிருக்கக் கூடிய ராஜ்யங்களில் கொண்டுவந்திருக்கும் நிலச் சீர்திருத்தத்தையே முன்னோடியாக வைத்துக் கொள்ளலாம். நமது மாகாணத்திற்கு ஏற்றபடி அதை சீர் திருத்திக் கொள்வது பெரும் காரியம் அல்ல.

3-40 p.m.

ஆகவே விவசாயிகளுடைய முன்னேற்றத்திற்கு தக்க நியாயம் அளிக்க முன் வரவேண்டாமா ? அவர்களுக்கு அப்படிச் செய்ய முடியாதா ? ஆனால் நில சீர்திருத்தத்தை எதிர்த்து பேசக்கூடியவர்கள் இங்கே இருக்கலாம். ஆனால் அவர்களுக்கு பேசுவதற்கு துணிவு இல்லாமல் இருக்கலாம். அவர்கள் உண்மையை புரிந்துகொண்டிருக்கிறார்கள். அந்த நிலைமையில் நிலசீர்திருத்தத்தைக் கொண்டுவருவதற்கு சர்க்கார் ஏன் தாமதிக்க வேண்டும் ? ஆனால் விவசாய வருமான வரி கொண்டுவரப்பட்டிருக்கிறது. அதனால் மேலும் மேலும் நிலச் சீர்திருத்தம் கொண்டுவருவதற்கு எவ்வளவு தொந்தரவுகள் ஏற்படுகின்றன என்பது நன்றாக தெரிய வரும்.

அடுத்தபடியாக சிறு சேமிப்பு திட்டத்தைப்பற்றி பேச வேண்டியதாக இருக்கிறது. அதைப்பற்றி பேசும்போது கனம் அமைச்சர் அவர்கள் அதில் எந்த விதமான நிர்ப்பந்தமும் செய்யவில்லை, நிர்ப்பந்தம் கிடையாது என்று குறிப்பிடுகிறார். அப்படி நிர்ப்பந்தம் இருக்கிறது என்று என்னால் குறிப்பாக சொல்ல முடியும். சில சர்க்கார் மேல் அதிகாரிகள் தங்களுக்கு கீழ் இருக்கும் அதிகாரிகளை நிர்ப்பந்திக்கும் அளவில் வசூல் செய்ய வேண்டும் என்று அவர்களுக்கு தாக்கீது போயிருக்கிறது என்பது எங்களுக்கு தெரிய வருகிறது. சிறு சேமிப்பு முறையில் சரியானபடி வசூல் செய்யாவிட்டால் தக்க நடவடிக்கை எடுக்கப்படும் என்று கிராம அதிகாரிகளுக்கு மேல் அதிகாரிகள் அறிக்கைகள் விட்டிருக்கிறார்கள் என்பதை இங்கே இருக்கக்கூடிய மந்திரிகளுக்கு ஞாபகப்படுத்த விரும்புகிறேன். இன்னொரு விஷயத்தையும் சொல்லிக்கொள்ள ஆசைப்படுகிறேன். தேர்தலில் ஏராளமாக வோட்டுப் பெற்று வெற்றி பெற்றுவிட்டோம், ஜனங்கள் தங்கள் பக்கத்தில்தான் இருக்கிறார்கள் என்று சொல்லிக்கொள்வதில் அர்த்தமில்லை. உண்மையான ஆதரவிருந்தால் கடன் சுலபமாக வசூலாகும். நாங்கள் இரண்டு அல்லது மூன்று அல்லது பத்து அல்லது பதினைந்து பேர்கள்தான் இருக்கிறோம். அதனால் ஜனங்களுக்கு எங்களிடத்தில் நம்பிக்கை இல்லை என்ற அர்த்தம் இல்லை. சிறு சேமிப்பு விஷயமாக ஜனங்களிடத்தில் அணுகும்போது அதன் உண்மையை அவர்களுக்கு எடுத்துச் சொல்லவேண்டும். ஆனால் நீங்கள் என்ன செய்திருக்கிறீர்கள். காங்கிரஸ் முன்னால் இருக்கக்கூடிய திட்டத்தைப்பற்றி அவர்கள் ஜனங்களிடத்தில் போய் சொல்லி இருக்கிறீர்களா ? எதற்காக பணம் வேண்டும் என்றும் எந்த திட்டங்களை அமைத்திருக்கிறோம் என்றும் நீங்கள் மக்களிடத்தில் சென்று பேசியிருக்கிறீர்களா ? அதற்கு வேண்டிய என்ன நடவடிக்கைகளை எடுத்துக்கொண்டிருக்கிறீர்கள் ? எந்த ஊரில் கூட்டம் போட்டு இதைப்பற்றி சொல்லியிருக்கிறீர்கள் ? ரூபாய் 100 கொடுக்க வேண்டும் இல்லாவிட்டால் புரம்போக்கு நிலம் இருக்கிறது, வாய்தா இருக்கிறது இது போன்ற பயமுறுத்தல்கள் இருக்கின்றன. இதைப்பற்றி பேசுவதற்கு நான் வரவில்லை. காங்கிரஸ் கட்சிக்காரர்கள் சட்டசபை அங்கத்தினர்கள் ஊர் ஊராகச் சென்று ஜனங்களிடத்தில் இந்த வரவு செலவு திட்டத்தைப்பற்றியும் அதில் போடப்பட்டுள்ள திட்டங்களைப்பற்றியும் எடுத்துச் சொல்லி அதற்கு பணம் வேண்டும் என்று சொல்லி இருக்கிறார்களா என்று கேட்கிறேன். அப்படிச் சொல்லி ஜனங்களுக்கு நம்பிக்கை ஏற்படும் படி செய்து அதன் பிறகு வசூல் செய்திருக்க வேண்டும். அதன் பிறகுதான் ஜனங்களுக்கு நம்பிக்கை ஏற்படும். என்னையே வைத்துக் கொண்டு சில அதிகாரிகள் சொல்லுகிறார்கள் : "பணம் இல்லை என்று சொல்லிவிட்டால் அவரிடம் ரைஸ் மில் இல்லையா, மின்சாரத்தை வெட்டி விடுவேன் என்று ஏன் சொல்லவில்லை, இரண்டு அல்லது மூன்று அரவை அரைத்தார் என்று சொல்லி ஏன் கேஸ் போடக்கூடாது" என்று சொல்லுகிறார். இந்த விதத்தில் கட்டாயப் படுத்தி பணத்தை வாங்குகிறார்கள். கேஸ் போடலாமே என்றுகூட சொல்லி பணத்தை வசூல்

செய்கிறார்கள். இப்படி உத்தரவு போட்டிருப்பது எழுத்து மூலமாக இல்லை, வாய்மொழி மூலமாகத்தான் இருக்கிறது. பத்துக் கோடி ரூபாய் வசூல் செய்ய வேண்டும் என்று சொல்லி இருக்கிறார்கள். சாதாரணமான முறை யில் ஜனங்களிடத்தில் உற்சாகத்தை மூட்டி வசூல் செய்தால் இந்தப் பணத்தை அவர்கள் கொடுத்து விடுவார்கள். அவர்களுக்கு நியாயமான காரியங்களைச் செய்யப் போகிறோம் என்று சொன்னால் அவர்கள் முன் வந்து கொடுப்பார்கள். ஆனால் அப்படி இப்பொழுது நடக்காமல் கட்டாயப் படுத்தி வசூலிக்கிறார்கள். அது சரியல்ல.

மற்றும் புது புது வரிகளைப் போடப் போவதாக சொல்லுகிறார்கள். டீசல் ஆயிலுக்கு வரி போடப்போகிறார்கள். அதனால் யார் பாதிக்கப் படுகிறார்கள் என்பதை பார்க்க வேண்டும். பஸ்ஸுக்குப் போட்டால் அதை பொது மக்களிடத்திலிருந்துதான் வசூலிக்கிறார்கள். அதைப் போலவே டீசல் ஆயிலுக்குப் போட்டால் அதனால் விவசாயிகள்தான் பாதிக்கப் படுகிறார்கள். அவர்கள்தான் விவசாயத்திற்கு இஞ்சின்களை உபயோகித்து வருகிறார்கள். அதனால் இந்த புது வரியினால் அவர்கள்தான் பாதிக்கப் படுவார்கள். அதைப் போலவே லாரிகாரர்கள்தான் டீசல் ஆயிலை உபயோகிக்கிறார்கள். லாரிகள்தான் சாமான்களை அங்கும் இங்கும் கொண்டு போய்க் கொடுக்கின்றன. அவைகளுக்கு வரி போட்டால் ஏழைகள்தான் பாதிக்கப்படுவார்கள். அதனால் இந்த புது வரியினால் விவசாயி உற்பத்தி பாதிக்கும் என்பதை சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். விவசாய உற்பத்தியைப் பெருக்குவதற்கு இது முட்டுக்கட்டையாக இருக்கும் என்பது என்னுடைய அபிப்பிராயம். எந்த அடிப்படையில் பார்த்தாலும் விவசாயி கள்தான் பாதிக்கப்படுகிறார்கள். மின்சாரத்திற்கு 25 சத விகித 'கட்' ஏற்படுத்தியிருக்கிறார்கள், ஆனால் சினிமாக்களுக்கு மூன்று அல்லது நான்கு தடவைகள் படம் விடலாம் என்றும் சொல்லுகிறார்கள்.

THE HON. SRI V. RAMIAH : விவசாயத்திற்கு மின்சார "கட்" கிடையாது.

SRI K. R. NALLASIVAM : பம்பு செட்டுகள் இருக்கின்றன. அவைகளுக்கு டீசல் ஆயில்தான் உபயோகப்படுத்துகிறார்கள். அதுதான் விவசாயத்திற்கு உபயோகப்படுகிறது. அதனாலும் விவசாயம் பாதிக்கப் படும் இந்த புது வரியினால். அவர்களுடைய வருமானமும் பாதிக்கப் படலாம்.

கடைசியாக ஒன்றை மட்டும் சொல்லிக்கொண்டு முடித்துக்கொள்ளு கிறேன். மத்திய அரசாங்க நிதி அமைச்சர் அவர்களைப்பற்றி சொல்ல வேண்டியதாக இருக்கிறது. ஆனால் இப்பொழுது நமது கனம் நிதி அமைச்சர் அவர்கள் இங்கு இல்லை. கனம் டி.டி.கே. அவர்களைப்பற்றி நமது நிதி அமைச்சர் அவர்கள் தங்களுடைய பட்ஜெட் பிரசங்கத்தில் குறிப்பிட்டிருக்கிறார். அவரைப்பற்றி என் குறிப்பிட்டிருக்கிறார் என்பது எனக்கு புரியவில்லை. தெற்கேயிருந்து மத்திய அரசாங்கத்திற்குப் போன இரண்டு பேர்களும் நல்ல பெயர் எடுத்துக்கொண்டு வரவில்லை. கெட்ட பெயரைத்தான் சம்பாதித்துக்கொண்டு வந்திருக்கிறார்கள். அதைக் கேட்டால் தமிழ் நாட்டிற்கே பெரிய வெட்கக் கேடாக இருக்கிறது. பட்ஜெட் பிரசங்கத்தில் அவரைப்பற்றி சொல்ல வேண்டியது என்ன இருக்கிறது? அவரைப்பற்றி சொல்லப்படுவதானது அவருக்கு வக்காலத்து வாங்கி பேசு வதாகத்தான் இருக்கிறது. உண்மையில் அதைப்பற்றி வருத்தப்பட வேண்டிய விஷயம். இப்படிப்பட்டவர்களைப்பற்றி இங்கே பேசுவதாக இருந் தால் அது எங்கே கொண்டுபோய் விடும் என்பதை யோசிக்க வேண்டும். எந்த அடிப்படையில் அவரைப்பற்றி இங்கு குறிப்பிட வேண்டும் என்பது தெரியவில்லை. இங்கிருந்து அங்கு போகிறவர்கள் நல்ல முறையில் பெயர் எடுத்து வரவேண்டும். இன்றைக்கு வந்திருக்கிற டி.டி.கே. போன்றவர் களைப்பற்றி நாம் பாராட்டிப்பேசுவது நியாயம் ஆகாது என்பதைச் சொல்லிக் கொள்ள விரும்புகிறேன். நேரம் இல்லாததால் இத்துடன் என்னுடைய பேச்சை முடித்துக்கொள்ளுகிறேன்.

4th March 1958]

3-46 p.m.

* Sri T. SAMPATH : Madam, I support the Budget which has been presented by the Hon. Minister for Finance and in doing so, I desire to express my view regarding some matters which have been referred to in the Budget. Last year the Budget showed a deficit of Rs. 4 crores and odd and some of the hon. Members belonging to the Opposition commented about the deficit nature of the Budget. What is the position to-day? Our financial position has improved. Not only we have been able to bridge the gap but we have wiped out the big deficit also. Even this small deficit of Rs. one crore and odd in this Budget is likely to be made good and covered up and it is going to be a surplus Budget to the tune of Rs. 15 lakhs. For this, we have to congratulate our Hon. Minister for Finance for his sagacity and ability in presenting such a nice Budget.

Madam, although there was a heavy deficit to the tune of Rs. 4 crores last year, there were no fresh taxation measures. But on the other hand, this year we have got indication for fresh taxation measures. This has depressed some of us to some extent. As I said, the deficit is not too large. It is only Rs. one crore and odd and the Hon. Minister for Finance has also indicated that it is likely to turn out to be a surplus one. Under the circumstances, one aspect has to be considered. Is it necessary to cover up this small deficit anticipated this year by way of additional taxation? Further, it has been indicated in the Budget speech—I refer to page 18—where the Hon. Minister for Finance anticipates larger receipts of revenue under Land Revenue, Betterment Tax, Motor Vehicles Tax, etc. Further in paragraph 24 of the Budget speech, he has referred to the interest question also. The Finance Commission has made a favourable recommendation in respect of this matter and if that is to be accepted by the Central Government, we will be getting another Rs. 60 lakhs. While such being the position, the Government have to carefully consider whether there is any need for fresh taxation measures.

I want to say a few words about the Agricultural Income-tax. The landholders have already been affected very badly. They have been hardly hit.

3–50 p.m.

The Hon. Finance Minister has referred to this measure and said that this may no doubt become inoperative when ceiling on landholding is enforced. So this envisages cut and ceiling is going to be fixed. That being so, whether there is need for this taxation measure now is a question which has got to be carefully considered. The landholders are now paying very heavy kists and also very heavy surcharge. It will amount to a double taxation. In addition to these a new tax is imposed which landholders cannot bear. They have got to pay kist and at the same time agricultural income-tax. This tax was formerly thought of by the Government. In the Subramaniam Committee report this was very carefully considered and there it has been mentioned that the system of revising land revenue assessments by means of agricultural income is not a practical proposition. In that report certain administrative difficulties have also been referred to. In

[Sri T. Sampath] [4th March 1958

the circumstances, the question of imposing taxes on agricultural income must be carefully considered. This will, according to me, affect the small landholders. At present a surcharge is levied on land assessments. It has been specified that if agricultural income-tax is introduced, Act 19 of 1954 will be cancelled. Granting that it will have to be cancelled, now under what must follow? Some of the small pattadars are not paying surcharges. But in paragraph 29, it has been stated that other sources of income will be taken into consideration in reckoning the total income. This according to me will certainly affect the small mirasdars. That is, those pattadars who are not paying surcharge now will be able to pay taxes if their other sources of income would be reckoned for the purpose of this taxation. 'Is that justified?' I ask. With regard to the exemption limit, it is proposed that Rs. 3,000 would be the limit. If we take into account the exemption limit in regard to other sections of income, like income-tax, sales tax, etc., it will be seen that the exemption limit as fixed is a higher level. Therefore, it is just and proper that at the time the Bill is contemplated, this exemption limit should be raised at least to Rs. 5,000.

I will now pass to the seasonal conditions which has been referred to by the Hon. Finance Minister. He has stated that the seasonal conditions were very fair throughout the State. On the other hand I may say that in my district, Tanjore district, we had very excessive rainfall and because of that heavy rainfall there was what we call in Tamil, "நீர் சாவி" which affected the crops. A bumper yield was expected, but at the time of actual harvest, the yield turned out to be far below the estimate.

Next, reference has been made to the stability of prices. Preceding me, a number of hon. Members who spoke referred to the upward trend of prices. Of course everybody complains about upward trend and I am of the view that this question has to be carefully considered. Government should investigate the causes for this. The cost of cultivation has gone up, for instance, plough bulls, agricultural implements, fertilisers have all become more costly. If the prices of these are reduced, I am sure, the prices of foodstuffs will naturally come down. On a former occasion, I had occasion to refer to fixation of foodgrain prices. I am referring it again both in the interest of the consumer and producer. I suggest that if ceiling on floor prices for foodgrains is fixed, it will be to the benefit of the consumer and protect the producer; prices should not go below a certain level. If it goes below it is the duty of the Government to protect the interests of the producer.

Then, with reference to food production, I wish to emphasise what the hon. Member Sri Vedaratnam Pillai also referred to, namely, the possibility of reclamation of 12,000 acres of land somewhere near Vadavoor village in Tanjore district. I suggest that Government should investigate this and if these lands are brought for cultivation the food problem could be solved to a certain extent.

4th March 1958] [Sri T. Sampath]

Again, in Tanjore there are about 14 lakhs acres of wet lands and out of them most lands are single-crop lands. If proposals are made to convert these single-crop lands into double-crop lands, it will certainly help to a large measure in increasing food production. Government should also render help by way of loans to these land owners to convert them into double crop lands. All this will really solve the food problem.

Next, I want to emphasise that there must be co-ordination between the landholder and the tiller. In fact I appeal to the landholders that they must adjust themselves to the changed environments and changed conditions. At the same time, I appeal to the tillers also that they should be considerate in their demands. Now that security of tenure has been assured and fair rent also fixed, they should all concentrate on increasing the production. They should adopt new methods of agriculture and take up to intensive methods of cultivation. I appeal to them to cultivate more intensively.

I am glad that Government are proposing to devote more attention to small irrigation schemes. I emphasised about this scheme on a former occasion. In this connection I wish to say that in respect of minor irrigation in Community Development and National Extension Service areas, Government must contribute by way of grant 50 per cent for silt clearance of channels. This was done when Community Development and National Extension Service schemes were introduced in Tanjore district, in respect of silt clearance of channels and deepening of tanks. I suggest that this may be re-introduced in our district.

Next with reference to industries, Sir, I am glad that the Neyveli Project is going to come into effect. May I make a request to the Government that there should be more intensive survey of the mineral resources of our State so that Government may have a full picture of the State's potentialities. We must be grateful to the Government for the progress we have made in Education. In this connection I have got to refer to one matter. At the time when White Paper on Education was discussed, we accepted certain recommendations contained therein and those recommendations and proposals are to be implemented. In this connection I have to make one suggestion and that is in regard to the strength proposed in a class in elementary school. A doubt is felt whether an elementary school teacher could handle 40 boys in a class. Now the strength is 20. There is a proposal increasing to 40 boys. I am afraid that 40 would be a big number for a teacher to handle. I have to state that this may also affect the elementary school teachers. In this way if the strength of boys in each class is increased, correspondingly, it will affect the teachers. Consequent to that there will be retrenchment, and it will lead to unemployment. If that happens, one lakh and odd teachers would be thrown into a miserable plight. I am therefore requesting the Government to consider this aspect of the question very carefully.

[Sri T. Sampath] [4th March 1958

In other respects, the Budget is very fairly prepared. I congratulate the Hon. Finance Minister and other officers of the Government on their work. With these words, I conclude my speech; thank you, Sir.

4 p.m. * SRI M. WILLIAM: Mr. Speaker, Sir, the Budget that is placed before this House is a well-balanced one and the masterly way in which the deficit is got over and the surplus is found, redounds to the credit of the Hon. Minister for Finance. Of course, several objections have been raised with regard to new taxation proposals. All of us know that the tax on sugar, cloth and tobacco has been abolished and I do not think there can be any objection with regard to the imposition of new taxes especially the tax on diesel oil, agricultural income-tax with an exemption limit of Rs. 3,000 and the tax on entertainment. Of course, with regard to the tax on entertainment, it is not the theatre-going people who are going to pay it. The Government must take steps to regulate the realization of this tax from the theatre-owners and film producers. It may so happen that it would work as a hardship to the theatre-owners but I am sure steps may be taken to regulate the rate of tax that is to be paid by the theatre-owners in such a way that it can be controlled and it may not fall a heavy burden on the theatre-going people.

Sir, I want to say one word about the entertainment tax on horse racing. The Government have already taken steps to ban crossword puzzles and lotteries. They should also take steps to abolish horse racing because horse racing is worse than gambling. The entertainment tax obtained from horse racing should not go to the Government treasury. We know the huge fraud that is being practised on the innocent public.

Coming to the broad features in the Budget, of course, all of us know that not only the Congress Government but all the parties are wedded to the policy of establishing a Socialistic pattern of society. If we want to establish such a society, we have to take measures that will lead to that objective. Looking at that angle, we have to consider the new taxation proposals. No progress can be made without raising the necessary financial resources. One of the most important features in the Budget is the prominent part that is given to Agriculture. For agricultural development, several schemes have been implemented. Of course, most of the major irrigation works have already been implemented and some of them are under half-way.

With regard to minor irrigation works, the Government have also allotted Rs. 70 lakhs. That is not a big sum. So far as minor irrigation work is concerned, my opinion is that a larger amount, at least one crore of rupees should be allotted because in places where there are no facilities for channels, people there have to depend on the tanks and unless the tanks are kept in a good condition, there is likelihood of the failure of crops. Every year de-silting of tanks has to be done and a huge amount has to be set apart for improving the minor irrigation works.

4th March 1958] [Sri M. William]

We also find in the Budget proposals for starting 300 large-sized credit societies and 200 small-sized credit societies and five Land Mortgage Banks. These are all made for the benefit of agriculturists. So, in several places we find that sufficient steps have been taken for improving agriculture and also for promoting the prosperity of the people. So, it may not be very hard for the peasant population to pay something by way of tax to the Government.

Then with regard to education, progressive measures have been adopted. Thousands of schools are to be started. In the White Paper on Education it is stated that the teachers to be appointed for higher secondary schools should have the minimum qualification of First Class M.A. or M.Sc. or Honours. For that, of course, universities also must be requested to increase the number of seats for the M.A., M.Sc. and Honours courses. Otherwise, there may not be the required number of candidates to fill up the posts when the occasion arises. In this connection, I have to say a word about the Kanyakumari district. As you know, that is a compulsory area as far as education is concerned, and the literacy there is higher than in any district. But there is discontent in the service personnel especially among teachers working in primary, middle and high schools. They feel that injustice is being done to them because of the disparity in the scales of pay existing in the other parts of the Madras State. I am sure, the Hon. Minister for Finance who is also in charge of Education will take early steps to redress the grievances of teachers in respect of their long-felt needs.

With regard to irrigation works in the Kanyakumari district, I have to say a few words. The Neyyar Project will give relief to only one-third of the Vilvancode taluk. Vilvancode taluk is the worst affected area. There are about 900 tanks and all these tanks are only rainfed ones. There is no channel though there is a river passing through the middle of the taluk. An important scheme called ‘Chittar Pattanamkal Scheme’ has already been investigated and the erstwhile Travancore-Cochin State had recommended that that scheme should be included in the Draft Second Five-Year Plan. But for some reasons unknown to us—probably because of the anticipated merger—that scheme was finally dropped. That is a completed scheme and if this scheme is implemented, 40,000 acres will be brought under cultivation and about two-thirds of the people in that taluk will be benefited. People will get water not only for drinking purposes but also for cultivation purposes. In the taluk ordinarily two crops are raised every year. Just at the time of flowering, for want of two or three waterings, the crops wither away and produce no yield. Every year people invest money on agriculture but there is no return for that and thus the people became impoverished year by year. That is a matter which the Hon. Minister for Finance, I am sure, will take into serious consideration.

With regard to nationalization of transport, I have to say one or two words. Madras buses are running only on the main line in the Kerala area up to Trivandrum. But the Kerala buses are running not only on the main line but also on the branch lines in the Kanyakumari district which enables the Kerala Government to earn more income. If Marthandam where six routes branch off to different places, is made a base for shuttle service, I am sure, that will bring in a large revenue to the Government. The Kerala buses which are plying in those routes should not be allowed to ply, as that will affect the revenue of this State. That is a matter which, I think, the Hon. Minister for Transport will take into account and try to nationalize all the routes. Some of the buses are in a miserable condition. About 20 buses which were handed over to our Government are in a bad condition and they are nil price buses. But still they are allowed to run with the result that there are occasional break-downs and the travelling public are put to hardship. That affects the efficiency of the administration. I hope the Hon. Minister for Transport will take this aspect of the matter into consideration.

Then, with regard to the integration of service, I want to say one word. The merger was effected in November 1956 and nearly two years have elapsed and yet the intregration of service is not completed. There are about half a dozen officers including magistrates, sub-magistrates and munsifs whose scales of pay are not fixed. That means there is discontent among them. That affects the working of the offices. So I appeal to the Government to see that the integration of service is completed and injustice redressed at an early date. With these words, I finish my speech.

4–10 p.m.

Sri S. RAMASAMI THEVAR : கனம் தலைவர் அவர்களே, சென்ற இரண்டு தினங்களாக 1958–59-ம் ஆண்டு வரவு செலவு அறிக்கையைப்பற்றி விவாதிக்கும்போது இலங்கையைப்பற்றி சில பேச்சுகள் நடந்தது. இலங்கையைப்பற்றி நாம் அலட்சியமாக இருந்துவிடக் கூடாது. அங்குள்ள நிலைமை நாளுக்குநாள் மோசமாகிக் கொண்டு வருகிறது. அதோடு கூட, அங்குள்ள தமிழ் மக்கள் இங்கு வருவதற்கு வழி இல்லாமல் தவித்துக் கொண்டிருக்கிறார்கள். உள்ளபடி அங்கிருந்து இங்கு வர விரும்புகிறார்கள். ஆனால் நமது இந்திய ஹை கமிஷன் உத்தரவு கொடுப்பதில்லை. அது கிடைக்க பல சான்றுகள் வாங்கி அனுப்ப வேண்டியிருக்கிறது. அதில் சங்கடங்கள் பல நேரிடுகின்றன. அதோடு, பல இந்தியர்கள், கிட்டத்தட்ட 50,000-க்கு மேல் அங்கு தவிக்கிறார்கள். அவர்கள் அங்கு திருடர்களைப் போல் வாழ்கிறார்கள். அவர்கள் சர்க்காருக்கு பயந்து வாழ வேண்டியிருக்கிறது. அவர்களின் எஜமானர்களிடமிருந்து சரியான கூலி வாங்க முடியாமல் இருக்கிறது. கூலி கேட்டால், நீ திருட்டுத் தனமாக வந்தவன்தானே, கள்ளத்தோணி, உன்னைப் போலீஸில் காட்டிக் கொடுத்து விடுகிறேன் என்று பயமுறுத்துகிறார்கள். அப்படி, 50,000-க்கு மேற்பட்ட இந்தியர்கள் அங்கு திண்டாடுகிறார்கள். இவர்களின் நிலை என்ன ? அவர்களை இலங்கை சர்க்கார் ஏற்றுக்கொள்ளவில்லை. நம் சர்க்காரும் அவர்களை இங்கு அழைத்துக்கொள்ள ஒரு வழியும் செய்து கொடுப்பதில்லை. இந்த நிலையில் அவர்கள் அங்கு அகதிகளாக வாழ வழியின்றி கேவலமாக நடத்தப்படுவதை நாம் பார்த்துக் கொண்டிருக்கலாமா ? அதற்கான வழி ஒன்றும் இந்த பட்ஜெட்டில் காணவில்லை என்பதை வருத்தத்துடன் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். அடுத்தபடியாக, பட்ஜெட்டில் பல திட்டங்கள் இருக்கிறது. நல்ல திட்டங்கள்

4th March 1958] [Sri S. Ramasami Thevar]

சிலவும் இருக்கின்றன. ஆனால் எந்தத் திட்டமும் சரியானபடி நல்ல முறையில் நடைபெற வேண்டும் என்று நாம் பார்ப்பது இல்லை. அதோடு நாட்டில் இன்று லஞ்சம் உச்ச நிலையை அடைந்து விட்டது. எடுத்ததற் கெல்லாம் லஞ்சம். சாதாரணமாக ஒரு அதிகாரியைப் பார்ப்பதற்கு அந்த சேவகனுக்கு லஞ்சம் கொடுக்க வேண்டியிருக்கிறது. லஞ்சத்தை அடக்கு வதற்கு ஒரு வழியும் காணோம். நாட்டில் தாட்சண்யமும், சலுகையும் பெருகிக் கொண்டு வருகிறது. அதை அடக்க முடியாத நிலையில் இருக் கிறோம். ஒரு உதாரணம் சொல்ல விரும்புகிறேன். ஒரு வியாபாரி நிறுத்துக் கொடுப்பதற்குப் பதிலாக அளந்து கொடுத்தார், உரத்தை. அதை குறிப்பிட்ட அதிகாரி கண்டு பிடித்தார். உடனே அந்த வியாபாரியானவர் அந்த அதிகாரியின் மேல்அதிகாரியைக் கண்டு, சிறு சேமிப்பிற்காக ஆயிரம் ரூபாய் தந்திருக்கிறேனே, என்னை பிடித்து விட்டார்களே என்று சொல் கிறார். உடனே இந்த அதிகாரி கீழ் அதிகாரியைக் கூப்பிட்டு மன்னித்து விடு, அவர் சிறு சேமிப்பிற்காக ஆயிரம் ரூபாய் கொடுத்திருக்கிறார் என்று சொல்லி அந்த வியாபாரி தப்பித்து விடுகிறார். இது போன்று, சலுகையும், லஞ்சமும் பெரிய இடத்தில் இருந்து சிறிய இடம் வரை நடக்கிறது. ஆகவே, லஞ்சத்தைப் போக்க வழி கண்டு பிடித்தேயாக வேண்டும். இல்லாவிடில் நம் நாடு கீழ் நோக்கியே போய்க்கொண்டிருக் கும். அடுத்தபடியாக, நம் நாட்டில் இன்று உணவுப் பற்றாக்குறை இருக்கிறது. அதைக் குறித்து சர்க்காரின் புள்ளி விவரங்கள் சரியானபடி இல்லை என்பதை எடுத்துக் காட்டியபோது கூட சில அங்கத்தினர்கள் மற்றவர்களை, எடுத்துச் சொன்னவர்களை குறை கூறுகிறார்கள். நான் வசிக்கக்கூடிய வட்டம் 10,000 ஏக்கர் கொண்டதாகும். அதற்கு ஒரு கணக்கன்தான் இருக்கிறான். ரெவின்யூ டிப்பார்ட்மெண்ட், ஸெட்டில் மெண்ட் ஆபீஸ் இன்னும் பல அலுவலகங்களில் அவன் கணக்கு எழுத வேண்டியிருக்கிறது. அது போக இந்த 10,000 ஏக்கர் உள்ள இடத் திற்கும் சேர்த்து கணக்கு எழுத வேண்டுமென்று சொன்னால் அது எப்படி முடியும்? அதுவும் இல்லாமல் கணக்குப் பிள்ளைகள் கிராமத்தில் இருப்பதில்லை. நகரத்தில்தான் இருக்கிறார். நகரத்தில் இருந்துதான் கணக்கு எழுதுகிறார்கள். ஆகவே, சரியான புள்ளிவிவரங்களை அவர் களால் எடுக்க முடியாது. அதோடு ஆண்டவன் பேரில் அநேக இடங்கள் சும்மா கிடக்கிறது. அவைகளை ஏழை மக்களுக்கு கொடுத்து விவசாயம் செய்யச் சொன்னால் உணவு உற்பத்தி பெருக முடியும். நான் சொல் கிறேன், அரந்தாங்கிப் பகுதியில் ஆவுடையார் கோவிலுக்கு சொந்தமான பல கிராமங்கள் இருக்கின்றன. இந்தக் கிராமங்கள் ஒரு காலத்தில் ஜமீந்தார்களால், நிலப் பிரபுக்களால் தானமாக கொடுக்கப்பட்டன. அந்தக் கிராமங்கள் எல்லாம் கவனிப்பார் அற்றுக் கிடக்கின்றன. அவைகளை சர்க்கார் வசப்படுத்த நினைக்கவில்லை. வசப்படுத்தாமல் இருக்கப் போகிறோம் என்று ஒரு அறிக்கை கூட விடுக்கவில்லை. அதனால் கோவிலாரும் அந்தக் கிராமங் களை மராமத்து செய்வதில்லை. சர்க்காரும் அலட்சியப்படுத்துகிறார்கள். குளங்கள் வலை பின்னப்பட்டிருக்கின்றன. அவை மராமத்து செய்யப் படாமல் மக்கள் கஷ்டப்படுகிறார்கள். நான் சொல்கிறேன். அரந்தாங்கிப் பகுதியில் உள்ள குளங்களை எல்லாம் மராமத்து செய்தால் அங்கு உணவுப் பற்றாக்குறை நீங்கி விடும் என்பதில் சந்தேகமே கிடையாது. சிறு நீர்ப் பாசனங்களைப்பற்றி சொல்லும்போது, அரந்தாங்கித் தாலூகாவில் ஜீவ நதி ஓடாவிட்டாலும் காட்டாறுகள் பல ஓடுகின்றன. இவற்றின் குறுக்கே அணை கட்டிக் கொடுத்தால் அரந்தாங்கிப் பிரதேசத்தில் பஞ்சமே ஏற்படாது என்று பல தடவைகள் சொல்லி யிருக்கிறேன். நற்பவழக்குடி பகுதியில் ஒரு அணை கட்டிவிட்டால் அது கிட்டத்தட்ட 5,000, 6,000 ஏக்கருக்கு பாயும். அதிகச் செலவு இல்லாமல் ஏக்கர் ஒன்றுக்கு 300 ரூபாய் செலவில் திட்டத்தை நிறைவேற்றலாம். அந்த பூமிகளில் புஞ்சை விவசாயம் செய்ய முடியாது. மராமத்து இலாகா மந்திரி யவர்கள் எங்கள் பகுதிக்கு வந்த போது அவர்களே சில கிராமங்களுக்குப் போக மிகவும் கஷ்டப்பட்டார்கள். ஆனால் அவசியமாக போக வேண்டியிருந்தது. ஜீப்பில் கூட போக முடியவில்லை. ரோடு வசதி அங்கு கிடையாது. ரோடு வசதியிருந்தால் தான் விவசாயிகள் உணவு தானியங்களை ஓரிடத்தில் இருந்து இன்னொரு இடத்திற்குக் கொண்டுபோக முடியும். அதோடு, விவசாயிகளுக்கு கடன் கொடுப்பது அவர்களுக்கு தக்க சமயத்தில் கிடைக்க வேண்டும். எற்ற

காலத்தில் அது கிடைக்க வேண்டும். அதுவும் கால தாமதம் இல்லாமல் கிடைக்க வேண்டும். ஒரு விவசாயி மனு போட்டால் குறைந்தது 20, 30 தடவை கணக்கரை காண வேண்டியிருக்கிறது. அவருக்கு ஏதாவது கொடுத்தால்தான், அல்லது கொடுக்க சம்மதித்தால்தான் அவர் கையெழுத்து போடுவார். அப்படி விவசாயி 20, 30 தடவை நடப்பதால் அவன் வேலையும் கெட்டு விடுகிறது. அதனுல் அவன் விவசாய வேலை தடைபடுகிறது. அடுத்தபடி அவன் கிராம அதிகாரியைக் காண வேண்டியிருக்கிறது. பின் வேறு அதிகாரிகளை காண வேண்டியிருக்கிறது. இப்படி ஒவ்வொரு அதிகாரியையும் கண்டு கொண்டு இருப்பதால் அந்த விவசாயியின் வேலை கெடுகிறது. பணம் போவதோடுகூட அவன் வேலையும் வீணுகக் கெட்டுப் போகிறது. விளைச்சலும் கெடுகிறது. தண்ணீர் பாய்ச்ச வேண்டிய நேரத்தில் தண்ணீர் பாய்ச்ச வில்லை என்ருல் பயிர் கெட்டுப்போய்விடுகிறது. பயிர் காய்ந்து விடுகிறது. ஒரு கத்திரிச் செடிக்கு தண்ணீர் விட வேண்டிய சமயத்தில் தண்ணீர் விடவில்லை என்ருல் அது வாடி வதங்கிப்போய் விடுகிறது. எப்படி மனிதனுக்கு தாகம் ஏற்படுமோ அதேபோல்தான் தாவரங்களுக்கும், தாகம் ஏற்படுகிறது. ஆகவே, நான் சொல்வது என்னவென்ருல், ஒரு விவசாயி மனு கொடுத்தால் நேரடியாக சம்பந்தப்பட்ட அதிகாரிக்கு மனு செய்ய வேண்டுமென்று இருக்கவேண்டும்.

4-20 p.m.

தாசில்தாருக்கு மனுப் போட்டால் கர்ணத்திற்கு அவரே நேரில் அனுப்பி விவரம் தெரிந்து கொள்ள வேண்டும். அவ்விதமும் இல்லாமல் யாருக்கெல்லாமோ அனுப்பி விடுவதால் பலவிதமான கஷ்டங்கள் ஏற்படுகின்றன. அதை போக்குவதற்கு சர்க்கார் முன் வரவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். மேலும் எமது தாலுகாவை எடுத்துக்கொண்டால் அங்குள்ள பல காரியங்கள் உங்களுக்கு ஆச்சரியமாக இருக்கலாம். அங்கு பல கிராமங்கள் நூதனமாக இருக்கின்றன. பல இனும் ஜமீன் கிராமங்களை சர்க்கார் எடுத்திருக்கிருர்கள். இன்னும் சில ரயத்வாரி கிராமங்கள் வரி செலுத்தி வருகிறது. இதில் ஆச்சரியம் என்னவென்ருல் பாதரக்குடி என்னும் கிராமம் சர்க்கார் ரயத்துவாரியாயிருந்தும் இப்பொழுதும் வரியும் செலுத்திக் கொண்டு, மானியமும் கொடுத்து வருகிறது. இவ்விதம் சர்க்கார் கிராமமாயிருந்தும் இன்னும் அந்த கிராமம் அடிமையாகவே இருந்து வருகிறது. இதை சர்க்கார் உடனடியாக போக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். மேலும் சிறு நீர் திட்டங்களுக்கு 70 லட்சம் ரூபாய் ஒதுக்கப்பட்டிருக்கிறது. இது போதாது, இன்னும் கூடுதலாக ஒதுக்க வேண்டுமென்றும் கேட்டுக் கொள்கிறேன். அப்போதுதான் சிறு குளங்கள், சிறு தேக்கங்கள் இவைகளை யெல்லாம் பண்படுத்த முடியும் என்பதை சொல்லிக் கொண்டு முடித்துக் கொள்கிறேன்.

* SRIMATHI HEMALATHA DEVI : மதிப்பிற்குரிய அவைத் தலைவர் அவர்களே, கனம் நிதி அமைச்சர் அவர்கள் மத்திய அரசாங்கத்தினுடைய சலுகைகளை எதிர் பார்த்தும் மற்றும் ஒரு சில வரிகளை விதித்தும் சமர்ப்பித்திருக்கின்ற இந்த வரவு செலவு திட்டத்தைக் குறித்து விவாதிக்கையில் ஒரு அங்கத்தினர் இந்த திட்டமானது குல்லாய்க்கு ஏற்றவாறு தலையை சரியாக்குவது போல் இருக்கிறது என்று சொன்னுர்கள். எதிர் கட்சியிலிருந்து பேசுகிறவர்கள் யாராய் இருந்தாலும் சரி அவர்கள் குறை கூருமல் இருக்கின்ருர்களா அல்லது அரசாங்கம் செய்திருப்பதை ஏற்றுக் கொண்டிருக்கிருர்களா என்று பார்த்தால் அதுதான் இல்லை. நேற்றிலிருந்து இதுவரைக்கும் பேசினவர்கள், பேசப் போவோர்கள் நாட்டினுடைய முன்னேற்றத்தை விரும்புபவர்களாய் இருந்தாலும் சரி அல்லது நாட்டினுடைய சுபீட்சத்தை விரும்புகிறவர்களாய் இருந்தாலும் சரி எல்லோரும் ரோடுகள் வேண்டும், மின்சார வசதி வேண்டும், பள்ளிக் கூடங்கள் வேண்டும், ஆசுபத்திரிகள் வேண்டும் இவ்விதமாக எல்லாம் வேண்டும், வேண்டும் என்று அடுக்கிக்கொண்டேதான் போகிருர்கள். இவ்வாறு எல்லாம் ஏற்படுத்துவதற்கு மத்திய அரசாங்கத்தினுடைய உதவியை எதிர்பாராமல், அல்லது ஏதாவது வரிகளை போடாமல் எவ்வாறு அரசாங்கம் இவைகளை எல்லாம் நிர்வகிக்க முடியும் என்பது இவர்கள் உணராதது ஏனே என்று தெரியவில்லை. நமது நிதி அமைச்சர் அவர்கள் நமது மாகாணத்தின் தலை பூராவும் பெரிது அதற்கேற்றவாறு தொப்பியை பெரிதாக தைக்க வேண்டுமென்ற எண்ணத்தின் பேரில்தான்

4th March 1958] [Srimathi Hemalatha Devi]

மத்திய அரசாங்கத்தின் சலுகையையும் பெற்று ஏழைகளை பாதிக்காத வகையில் ஒரு சில வரிகளை மட்டும் விதித்து இந்த திட்டத்தை சமர்ப்பித்திருக்கிறார்கள். அந்தை நான் முழு மனதுடன் வரவேற்கிறேன். சிலர் ஏழைகள் மீது வரி போட்டு விட்டார்கள் என்று குறை கூறுகின்றார்கள். ஆனால் இன்றைக்கு இருக்கின்ற நிலைமையை எடுத்துப் பார்த்தால் சினிமாவுக்குப் போகக்கூடியவர்கள் ஏழைகளாக இருந்தாலும் அவர்கள் தாழ்ந்த கட்டணத்திற்குதான் போவார்கள். இவர்கள் போய்க்கொண்டிருக்கின்ற ஆறு அணா கட்டணத்திற்கு இனிமேல் ஆறேகால் அணாதான் கொடுக்க வேண்டியிருக்கும். அதிலும் கிராமப் புறங்களிலுள்ள கடைசி கட்டணத்திற்கு இரண்டரை அணா அல்லது மூன்று அணா இருக்கும். இவற்றில் ஒன்றரை தம்பிடிதான் கூடுதலாக கொடுக்க வேண்டியிருக்கும். ஆனால் பணம் உள்ளவர்கள் 15 அணா அல்லது ரூ. 1-4-0 அல்லது ரூ. 2-8-0 என்று கொடுத்து சினிமாவுக்கு போகிறார்கள். இதில்தான் கூடுதலாக இவர்கள் கொடுக்க வேண்டியிருக்கும். எனக்கு சொத்து இருக்கிறது, நான் ஏன் தாழ்ந்த வகுப்புக்கு போக வேண்டுமென்று நினைத்து மேல் வகுப்புக்கு போகிறார்கள். தாழ்ந்த தட்டில் போனால் கேவலம் என்று நினைக்கிறார்கள். அவர்கள்தான் இரண்டரை ரூபாய் கொடுத்து போகிறார்கள். இவ்விதம் போகிறவர்கள் நாட்டிற்கான நல்ல காரியங்களைச் செய்ய கூடுதலாக மூன்று அணா கொடுத்தால்தான் என்ன ? எனவே இவ்வரியினால் ஏழை மக்கள் பாதிக்கப்படமாட்டார்கள். அதே மாதிரி தான் குதிரைப் பந்தயத்திற்கு ஏழைகளும் போகிறார்கள், பணக்காரர்களும் போகிறார்கள். இவ்விதம் போவது யாராய் இருந்தாலும் அது தவறு என்பதை நாம் எல்லோரும் அறிகிறோம். பணக்காரர்கள்தான் அதிகமாக போகிறார்கள். அவர்களுக்குத்தான் அதிகமாக மேலும் மேலும் பணம் சேர்க்க வேண்டுமென்ற ஆசை ஏற்படுகிறது. ஆகவே ஏழைகள் பாதிக்கக் கூடாது என்ற முறையில்தான் அரசாங்கம் இதற்கு வரிகளை விதித்திருக்கிறார்கள். அடுத்தபடியாக டீஸெல் எண்ணெய் வரியை பொறுத்த வரையில், பம்பு செட்டுகளுக்கு விவசாயிகள் டீஸெல் எண்ணெயை வைத்து உபயோகித்து வருவதால் விவசாயி பாதிக்காதவாறு அவர்களுக்கு ஒரு விதி விலக்கு அளித்து இதைக் கொண்டு வந்தால் மிக நலமாக இருக்கும் என்று நான் கருதுகிறேன். அதே மாதிரி விவசாய வருமானம் மூவாயிரம் ரூபாய்க்கு மேல் இருந்தால் வரிகள் போடப்படும் என்று அறிவிக்கப் பட்டிருக்கிறது. இவ்விதம் விவசாயத்தில் மூவாயிரம் ரூபாய்க்கு மேல் வருவாய் உள்ளவர்கள் நல்ல வசதியுள்ளவர்களாய்தான் இருப்பார்கள். இதனால் ஏழைகள் பாதிக்கப்படமாட்டார்கள். ஆகவே இந்த வரி விதிப்பானது ஏழைகளை பாதிக்காது என்றுதான் நான் கருதுகிறேன். அடுத்ததாக பட்ஜெட் உரையில் "அமராவதி, சாத்தனூர், கிருஷ்ணகிரி, மணிமுத்தாறு" போன்ற நமது பெரிய நீர்ப்பாசன திட்டங்கள் அனைத்தும் அநேகமாக நிறைவேறிவிட்டன. இந்த அணைகளிலிருந்து நடப்பு ஆண்டில் பாசனத்திற்கு நீர் விடப்பட்டுள்ளது. இந்த ஆண்டில் பாசனத்திற்கு வைகை அணைக்கட்டுத் திட்டம் முடிவடையும். 1960-ம் ஆண்டில் கட்டளை, புல்லம்பாடி திட்டம் முடிவடையும். வீடூர், நெய்யாறு திட்டங்களிலும் வேலை தொடங்கியுள்ளது. நீர்ப்பாசனத் திட்டங்களுக்காக நடப்பு ஆண்டில் இரண்டு கோடி எண்பத்தி ஆறு லட்ச ரூபாய் செலவு செய்யவும் 1958–59-ம் ஆண்டில் ஒரு கோடி அறுபத்தி ஒன்பது லட்ச ரூபாய் செலவு செய்யவும் ஏற்பாடாகி உள்ளது" என்று குறிப்பிட்டிருப்பதை பார்த்து மிக மகிழ்ச்சியடைகிறேன். இந்த சமயத்தில் ஒரு விஷயத்தை குறிப்பிட விரும்புகிறேன். அதாவது சேலம் ஜில்லாவில் பஞ்சப்பட்டி அணைக்கட்டு திட்டம் ஒன்றிருக்கிறது. பல ஆண்டுகளுக்கு முன்னாலேயே இதை பூர்த்தி செய்திருக்க வேண்டியது. இது சரியானபடி கவனிக்கப்படவில்லை. இதைக் குறித்து முதல் மந்திரி அவர்களிடமும் மராமத்து இலாகா மந்திரி அவர்களிடத்திலும் எடுத்து சொல்லப்பட்டிருக்கிறது. இதைப்பற்றி கவர்னர் பெருமான் அவர்களது உரையின்மீது பேசும்பொழுதும் குறிப்பிட்டேன். முதல் மந்திரி அவர்களின் முயற்சியால் அவர்களும் மராமத்து இலாகா மந்திரி அவர்களும் அந்த இடத்தில் வந்து பார்வையிட்டார்கள். இந்த அணை கட்டுவதற்காக மூன்று இடங்களை போய் பார்த்தார்கள். இந்த அணையை எந்த இடத்தில் கட்டினால் அந்த பிரதேசம் பூராவுக்கும் பாசன வசதி கொடுக்க முடியும் என்று பார்த்தார்கள். இதை தகுந்த இடத்தில்

சீக்கிரமாக கட்டி முடித்தால் தர்மபுரி தாலூகா முழுவதும் வளம் கொழிக்கும்படியான அளவில் செய்ய முடியும். ஆகவே இதை இரண்டாவது ஐந்தாண்டு திட்டத்தில் சேர்த்து உடனடியாக நிறைவேற்றித்தர வேண்டுமென்று மராமத்து இலாகா அமைச்சர் அவர்களிடத்திலும் இந்த அரசாங்கத்தினிடத்திலும் வற்புறுத்திக் கேட்டுக் கொள்கிறேன். இது தவிர '' அடுத்த ஆண்டில் மேலும் **51** தேசீய வளர்ச்சித் திட்ட வட்டாரங்களும் **16** சமுதாய அபிவிருத்தி வட்டாரங்களும் ஏற்படுத்தத் திட்டமிட்டுள்ளோம் '' என்று குறிப்பிடப்பட்டிருக்கிறது. அதில் என்னுடைய தொகுதியில் ஒரு பகுதியும் சுற்றிலுமுள்ள பகுதிகளும் இத்திட்டத்தின் கீழ் சேர்க்கப் பட்டுள்ளது. இவைகளுக்கு மத்தியில் இந்த பாலக்கோடு பிர்க்கா என்கிற பகுதி இன்னும் சேர்க்கப்படாமல் இருக்கிறது. அதையும் சேர்த்துக் கொண்டால் தொடர்ச்சியாக அந்த பகுதியையும் சீர்திருத்த ஏதுவாகும் என்று இந்த சந்தர்ப்பத்தில் எடுத்துக்கூற ஆசைப்படுகிறேன்.

4–30 p.m.

'' இந்த நிதி ஆண்டில் **1,000** கிராமங்களுக்கு மின்சாரம் பரப்ப உத்தேசித்திருந்தோம். அதில் **910** கிராமங்களுக்கு டிசம்பர் மாத முடிவிற்குள்ளாகவே மின்சார வசதி அளித்துவிட்டோம். இந்த ஆண்டு முடிவிற்குள் நம் இலக்குக்கு மேலாகவே சாதித்து விடுவோம். இப்பொழுது **6,200** கிராமங்களும், குக் கிராமங்களும் மின்சார வசதி பெற்றுள்ளன. சுமார் **60,000** தண்ணீர் இறவை இயந்திரங்கள் மின்சாரத்தினால் இயங்குகின்றன '' என்று இதில் குறிப்பிட்டிருப்பதுபற்றி மகிழ்ச்சியடைகிறேன். அதிலும் குறிப்பாக என்னுடைய தொகுதியில் பாலக்கோடு, பாப்பாரப்பட்டி இந்த இரண்டு பிர்க்காவில் மின்சார வசதி ஏற்படுத்தியிருப்பதைக் குறித்து மின்சார இலாகா அமைச்சர் அவர்களுக்கு என்னுடைய நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

பெண்ணகரம் ஒரு மலைப் பிராந்தியம். அங்கு மின்சாரம் பலம் எத்தனை பைசா என்றோ, அல்லது அது மின்மினிப் பூச்சிப்போல் இருக்குமா என்றோ கேட்கக்கூடிய நிலையில் இருக்கிறார்கள் அங்குள்ள மக்கள். ஆகையால் மலைக் காட்டுப் பிராந்தியமாக இருக்கும் பெண்ணகரம் பிர்க்காவிற்கும் உடனடியாக மின்சாரம் ஏற்படுத்திக் கொடுக்கவேண்டுமென்று மின்சார இலாகா அமைச்சர் அவர்களைக் கேட்டுக்கொள்கிறேன்.

கைத்தறி என்ற தலைப்பில், '' தேங்கிக் கிடக்கும் துணியை விரைவில் விற்பனை செய்வதற்கு மத்திய அரசாங்கம் தந்து வரும் மான்யத்தைக் குறைக்காமல் தொடர்ந்து தர வேண்டுமென்று இந்திய அரசாங்கத்திடம் வற்புறுத்தப்பட்டுள்ளது '' என்று வரவு செலவுத் திட்டத்திலே குறிப்பிடப் பட்டுள்ளது. இன்றைய பத்திரிகையிலே நான் பார்த்தது **1958**-ம் ஆண்டு பிப்ரவரி மீ 28உ யன்று பார்லிமெண்டில் சமர்ப்பிக்கப்பட்ட பட்ஜெட்டில் **5·07** கோடி ரூபாய் கைத்தறி அபிவிருத்திக்கு நிதி உதவி அளிப்பதென தெரிவிக்கப்பட்டுள்ளது. அதை அறிய மகிழ்ச்சியடைகிறேன்.

அடுத்தபடியாக '' கிராமங்களில் உள்ள மருத்துவ நிலையங்களுக்குச் செல்வதற்குத் தூண்டுகோலாக டாக்டர்களுக்கு ஒரு விசேஷப் படி தர முடிவு செய்துள்ளோம். அவர்களுக்குக் குடியிருப்பு வசதி செய்து தரவும் ஏற்பாடு செய்து வருகிறோம். நூற்றைந்து தாய் சேய் நல நிலையங்களைத் திறக்கவும் **900** தாய்களுக்கு பயிற்சி அளிக்கவும் நிதி ஒதுக்கப்பட்டுள்ளது '' என்று மருத்துவம், சுகாதாரம் என்ற தலைப்பில் கொடுக்கப்பட்டிருக்கிறது. இன்றைக்கு சாதாரணமாக ஒரு கிராமத்திற்குப் போக வேண்டுமென்று ஒரு டாக்டருக்கு உத்திரவு போட்டால், அந்த ஊர் பிடிக்காததன் காரணமாக லீவு போட்டுவிட்டு வேறு இடத்திற்கு மாற்றல் கேட்கிறார்கள். அவர்களுக்குக் கிராமங்களில் இருக்கப் பிடிப்பதில்லை. இந்தச் சந்தர்ப்பத்தில் இந்த மாதிரியான வசதியும் படி உயர்வும் வரவேற்கத் தக்கது. அதோடு மட்டுமல்லாது, பெரிய மலைக் காடான பிரதேசமாக இருக்கும் இடங்களிலும், ஆஸ்பத்திரி அதிக தூரம் உள்ள இடங்களிலும் ஆஸ்பத்திரிகளை ஏற்படுத்தி அதில் லேடி டாக்டர்களையும் நியமித்தால் நலமாக இருக்குமென்று தெரிவித்துக் கொள்கிறேன்.

4th March 1958] [Srimathi Hemalatha Devi]

கனம் நிதி அமைச்சர் அவர்கள் சமர்ப்பித்த வரவு செலவுத் திட்டத்தை ஆதரித்துப் பேசும் இந்த வாய்ப்பை அளித்த அவைத் தலைவருக்கு என் நன்றியை தெரிவித்துக் கொண்டு என் உரையை முடித்துக்கொள்கிறேன்.

Sri G. VAGHEESAM PILLAI : கனம் சபாநாயகர் அவர்களே, கனம் நிதி அமைச்சர் அவர்கள் கொண்டு வந்திருக்கும் வரவு செலவு திட்டத்தை ஆதரித்து சில வார்த்தைகள் பேச விரும்பு கிறேன். உணவு உற்பத்தியைப் பெருக்குவதற்காக விவசாயத் துறையில் அதிகத் தலைப்புகளில் பணம் ஒதுக்கப்பட்டிருக்கிறது. அதை நான் வர வேற்கிறேன். இந்தியாவில் ஒரு ஏக்கருக்கு சராசரி 750 பவுண்டுதான் விளைகின்றது. நம் ராஜ்யத்தில் ஒரு ஏக்கருக்கு 1,255 பவுண்டு விளைச்ச லுக்குக் கொண்டு வந்திருப்பது பாராட்டத் தகுந்த விஷயம். அதோடு 180 விதைப் பண்ணைகளுக்கு 72 லட்சம் ரூபாய் ஒதுக்கப்பட்டிருக்கிறது. இதிலே, நம் விவசாயிகள் நைட்ரஜனிக் மென்யூர்ஸ், அதாவது அம் மோனியம் ஸல்பேட் போன்ற உரங்களை உபயோகிக்க ஆரம்பித்துவிட்டார்கள். அது நல்லதுதான். சூப்பர்பாஸ்பேட்டை ஒரு சிலர் உபயோகித்து வரு கிறார்கள். இதைப் பாதி விலைக்கு விற்பதில் இந்திய சர்க்கார் சப்ஸிடி கொடுத்து வந்தார்கள். அது இப்போது நின்று விட்டது. பல மாகாணத் தில் சப்ஸிடி கொடுத்து வருகிறார்கள். நம் ராஜ்யத்தில் கூட சூபர் பாஸ்பேட்டை பாதி விலைக்கு அரசாங்கத்தார் வழங்கினால் விவசாயிகள் நைட்ரஜனிக் மென்யூர்ஸ், சூபர் பாஸ்பேட் இவைகளை உபயோகிக்கலாம். இதற்கு அரசாங்கம் நடவடிக்கை எடுக்க வேண்டுமென்று சொல்ல விரும்பு கிறேன்.

பூச்சி மருந்துகளுக்கு எட்டு லட்ச ரூபாய் ஒதுக்கியிருக்கிறார்கள். எந்தப் பிராந்தியத்தில் பெஸ்ட் அடிக்கிறது என்று ஜில்லா ஆபீஸர் notify செய்த பிறகு பாதி விலையில் கொடுக்கலாம் என்று விதி இருக்கிறது. இந்தப் பூச்சி மருந்தை வேறு ஒன்றுக்கும் உபயோகிக்க முடியாது. எந்த நேரத்திலும் இந்தப் பூச்சி மருந்துகளைப் பாதி விலையில் விவசாயி களுக்குக் கொடுக்க ஏற்பாடு செய்தால் நலமாக இருக்கும்.

ஆந்திரா பிரிந்த பிறகு கோடூர் பார்ம் போய்விட்டது. ஹார்டிகல்சரில் கவனம் செலுத்தி திட்ட காலத்தில் 28·5 லட்ச ரூபாய் செலவழிக்கத் திட்ட மிட்டிருக்கிறது. 1957–58-ல் 141 ஆயிரம் ரூபாய் செலவழிக்கப்பட்டிருக் கிறது. 1958–59-ல் 271 ஆயிரம் ரூபாய் செலவழிக்கத் திட்டமிட்டிருக் கிறது. இது போதாது. திட்ட காலத்தில் அதிகம் செலவழித்து 24 லட்ச ரூபாயில் வேறு இடத்தில் ஒரு பழப் பண்ணை ஆரம்பிக்க வேண்டும். அதற்கு முயற்சி எடுக்க வேண்டுமென்று சொல்லிக் கொள்ளுகிறேன்.

விவசாயத் துறையில் நல்ல முன்னேற்றம் கண்டிருக்கிறோம். நல்ல விவசாய முறைகளைப் பற்றி விளம்பரம் தேவை என்று சமுதாய நலத் திட்ட பிரதேசத்தில் சுற்றுப் பிரயாணம் செய்த இந்திய சர்க்காரின் அதிகாரி ஒருவருக்கு நான் ஆலோசனை சொல்லியிருக்கிறேன். அவர் நம் ராஜ்யத்திற்கும் வந்திருந்தார். சிதம்பரத்திற்கு வந்திருந்தார். நான் சொன்னேன் விவசாயிகளுக்குப் புரியும்படியான முறையில் நல்ல புதிய முறைகளைப்பற்றி சினிமா படம் எடுத்து அவர்களுக்குக் காண்பித்தால் நன்றாக இருக்கும் என்று. அவரும் அதை ஒத்துக் கொண்டார். செய்தித் தாள்களில் நிபுணர்களும், விவசாயத் துறையில் அனுபவம் உள்ளவர் களையும் கொண்டு கட்டுரைகளை எழுதி வினியோகிக்க ஏற்பாடு செய்தால் நம் விவசாயம் சீக்கிரமாக வளர்ச்சி யடையும். அதில் கவனம் செலுத்த வேண்டும்.

நீர்ப்பாசனம் சம்பந்தப்பட்ட வரையில் நம் ராஜ்யத்தில் அணைகள் கட்டு வதற்கு ஆறுகள் இல்லை. ஸோனல் கவுன்ஸில் மூலமாக கேரள அரசாங் கத்துடன் பேச்சு வார்த்தை நடத்துவது வரவேற்கத்தக்கது. நம் தென் னாற்காடு மாவட்டத்தில் கோமுகி, மணிமுத்தாறு, கள்ளக்குறிச்சி முதலிய வற்றில் அணைக்கட்டுகள் கட்டலாம் என்று 10 வருஷமாகத் திட்டமிட்டு வருகிறார்கள். ஆனால் பர்ஸெண்டேஜுக்கு கட்டவில்லை என்று எடுத்துக் கொள்ளவில்லை. அதையும் எடுத்துக் கொள்ள வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

[Sri G. Vagheesam Pillai] [4th March 1958

சிறு நீர்ப்பாசனத்திற்காக 80 லட்சம் ரூபாய் ஒதுக்கப்பட்டிருக்கிறது. பெரிய திட்டங்கள் அதிகமில்லாததால் இதற்கு இன்னும் அதிகம் ஒதுக்க வேண்டும். இது போதாது. புதிய திட்டங்களை எடுத்துக் கொள்ளவேண்டு மென்று அக்கரை இருப்பதால் பழைய வாய்க்கால்கள் தூர்ந்து போயிருக் கிறது. குளங்கள் தூர்ந்து போயிருக்கின்றன. அதைப் பற்றி கவனம் செலுத்தினால் உணவு உற்பத்தி பெருக்கம் ஏற்படும். இப்போது ஒதுக்கியிருக்கும் 80 லட்ச ரூபாயைச் செலவழிக்க இப்போதிலிருந்தே டிரைவ் இருக்க வேண்டும். அதிகப் பணம் ஒதுக்க நேரிட்டால் அதையும் ஒதுக்க வேண்டும். கடிலம், மணிமுத்தாநதி, பெண்ணையாறு போன்ற நதிகளில் பல அணைக்கட்டுகள் தூர்ந்து போயிருக்கின்றன. அவைகளுக்கு ஸ்குரூ பேரிங் ஷட்டர்ஸ் இருக்கிற வாய்க்கால்களும் சின்ன குளங்களும் இருக்கின்றன. இந்த ராஜ்யத்தில் தென்னாற்காடு மாவட்டத்திலே அதிக மான ஏரிகளும் குளங்களும் இருக்கின்றன. இந்தக் குளங்களை தூர் எடுத்தால் நல்ல பலன் ஏற்படும். ஆயிரம் ஏக்கருக்கு அதிகமுள்ள ஆயக்கட் உள்ள வாய்க்கால்களை சர்க்கார் செலவிலேயே வெட்ட வேண்டுமென்று சர்க்கார் உத்திரவு இருக்கின்றது. வருஷா வருஷம் உத்திரவு பிறப்பிக்க வேண்டியிருக்கிறது. இரண்டு, மூன்று வருஷங்களுக்கு நிரந்தரமான உத்திரவாயிருந்தால் நலமாக இருக்கும். பல வாய்க்கால்களை வெட்டுவதில் கால தாமதம் ஆகின்றது. அதையும் கவனிக்க வேண்டும். இந்த மாதிரி சென்ற வருஷம் 230 ஆயிரம் ஏக்கர் இரு போக சாகுபடியில் இருந்தது. இந்த வாய்க்கால்கள் வெட்டியதால் 40 ஆயிரம் ஏக்கர் இரு போக சாகு படிக்கு வந்திருக்கிறது. மற்ற வாய்க்கால்களை யெல்லாம் வெட்டினால் இன்னும் அதிகப்படியான நிலம் இருபோக சாகுபடிக்கும் கொண்டுவர முடியும். இந்த மாதிரி விஷயங்களில் அதிக கவனம் செலுத்தினால் இருபோக நிலங்கள் அதிகமாக ஏற்பட்டு, உணவு உற்பத்தி பெருகும். நீர்ப்பாசன மகா நாடு வருஷத்தில் இருமுறை கூடுகிறது. இது சம்பந்தமான **G.O.** விவரமாக இருக்கிறது. எந்த **"subject"** ஆனாலும் **pre-digest** பண்ண வேண்டுமென்று இருக்கிறது. ஜில்லா ஆபீசர்கள் இதற்கு அதிக முக்யத்துவம் கொடுக்க வேண்டும். **Review** பண்ணும்போது, ரெவின்யூ போர்டாரோ அல்லது அரசாங்கமோ பண்ணினால் நல்லது. சிறிய பாசனத் திட்டங்களை அங்கே அங்கத்தினர்கள் எடுத்துச் சொன்னால், விமோசனம் ஏற்பட்டு விடும். இரண்டு முறைக்குப் பதில் நான்கு முறை கூடினால் நல்லது.

4-40 p.m.

கோழிப் பண்ணைகளுக்காக பட்ஜெட்டில் 2 லட்சம் ரூபாய் ஒதுக்கி யிருக்கிறார்கள். இந்தியா சர்க்கார் $1\frac{1}{2}$ லட்சம் கொடுக்கிறார்கள். நமது மாகாணத்தில் மூன்று இடத்தில் பெரிய பண்ணைகளை ஏற்படுத்தியிருக் கிறார்கள். சிதம்பரம் தாலூகாவில் ஒரு பண்ணை ஏற்படுத்தியிருக்கிறார் கள். கிராமங்களில் சின்னச் சின்னக் கோழிகளை வைத்துக் கொண்டு, அபிவிருத்தி ஏற்படாமல் இருக்கிறது. கிராமப் பகுதிகளில் இலவசமாகக் கோழி முட்டைகளை கொடுத்தால் நல்லது.

**Tube Wells Scheme**-க்காக ரூ. 48 லட்சம் திட்ட காலத்தில் செலவழிக்க வேண்டுமென்று கூறப்பட்டிருக்கிறது. தென் ஆற்காடு ஜில்லாவில் **"111—Tube Wells Scheme"** என்று முன்பு ஒரு திட்டத்தை நிறை வேற்றி, அது திருப்திகரமாக முடிந்திருக்கிறது. சமீபத்தில், இன்னும் 100 குழாய்க் கிணறுகள் **(artesian wellss)** நிறுவ வேண்டுமென்று மந்திரி அவர்களிடத்தில் சொன்னேன். ஆவன செய்வதாகச் சொல்லி யிருக்கிறார்கள். சிதம்பரம் தாலூகாவில் இரண்டு பிர்க்காக்களில், கீழே 50 அடியிலிருந்து 150 அடிக்குள் நல்ல ஜலமிருக்கிறது. விவசாயிகளுக்கு ரூ. 2,000 அல்லது ரூ. 3,000 கடனாகக் கொடுத்தால் கிணறுகள் வெட்டு வதற்கு சௌகரியமாயிருக்கும்.

ஸ்தல அபிவிருத்தித் திட்டத்தின் கீழ் நல்ல வேலை நடந்து கொண்டு வருகிறது. இரண்டு, மூன்று வருஷத்துக்குள் எல்லா கிராமங்களிலும் சமுதாய நலத் திட்டத்தின்கீழ் நல்ல அபிவிருத்தி ஏற்பட்டிருக்கிறது. தேசீய அபிவிருத்தி திட்டத்தின்கீழ் அவைகளைக் கொண்டுவர இன்னும் 2, 3 வருஷங்களாகும். ஸ்தல அபிவிருத்தித் திட்டம் நன்றாக வேலை செய்து வந்தது. ஆனால் வரவு செலவுத் திட்டத்தில் பணம் ஒதுக்கப்பட

4th March 1958] [Sri G. Vagheesam Pillai]

வில்லை. இந்திய சர்க்காரும் பணம் கொடுப்பதை நிறுத்திவிட்டார்கள். நமது சர்க்கார் கண்டிப்பாக இதற்குப் பணம் தனியாக ஒதுக்க வேண்டும். செய்த வேலைகள் எல்லாம் குறைவாக, பூர்த்தியாகாமல் இருக்கிறது. அவைகள் பூர்த்தியாக வேண்டும். தேசிய விஸ்தரிப்புத் திட்டமோ அல்லது சமுதாய நலத் திட்டமோ இல்லாத கிராமங்களுக்கு ஸ்தல அபிவிருத்தி திட்டத்தின்கீழ் பணம் ஒதுக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

ஐந்தாண்டுத் திட்ட காலத்திற்குள் 300 பெரிய கூட்டுறவுக் கடன் சங்கங்களைத் திறக்க அரசாங்கம் உத்தேசித்துள்ளனர். இவைகளை இன்னும் அதிகப்படுத்த வேண்டுமென்று நினைக்கிறேன். நீண்ட காலக் கடன்களை **Land mortgage** பாங்குகள் கொடுக்கின்றன. குறுகிய காலக் கடன்களை, அதாவது மூன்று அல்லது ஐந்து வருஷத் தவணைகளில் செலுத்துமாறு, **Rural Banks** மூலமாகக் கொடுக்க வசதி செய்ய வேண்டும்.

கிராமங்களில் **Rural Housing Societies** இருக்கின்றன. இம்மாதிரி சங்கங்கள் பெரிய நகரங்களில்தான் நல்ல முறையில் செயலாற்றி வருகின்றன. கிராமப் புறங்களில் புதிய வீடுகள் கட்டிக்கொடுக்க வசதி செய்ய வேண்டும். **Town-Planning** முறைப்படி கிராமங்களில் வீடுகள் கட்டமுடியாதாகையால், விதிகளைத் தளர்த்தி நிறைய வீடுகள் கட்டுவதற்கு ஏற்பாடு செய்ய வேண்டும்.

மின்சார விஸ்தரிப்புத் திட்டம் நம்முடைய ராஜ்யத்தில் நன்கு முன்னேறி வருகிறது. ஆயிரம் கிராமங்களுக்குத் திட்டமிட்டதில், 900 கிராமங்களுக்கு மின்சாரம் வழங்கியாய் விட்டது.

வாய்க்கால்களுக்கு சமீபத்தில் நான்கு பர்லாங்குக்குள்ளே எங்கேயாவது மோட்டார் செட் வைத்துக்கொள்ள வேண்டுமென்றால், **P.W.D. permission** கொடுக்க வேண்டியிருக்கிறது. இதற்குக் கால தாமதமாகிறது. சில இடங்களில் **permission** கொடுக்க முடியாத நிலைமை ஏற்படுகிறது. சிதம்பரம் தாலுகாவில் வளையமாதேவி, எறும்பூர்நத்தம் போன்ற இடங்களில் வாய்க்கால் ஜலம் வருகிறதில்லை. மின்சாரம் எடுத்துக்கொள்ள தடை இருக்கிறது. **P.W.D.** டிபார்ட்மெண்டார் அனுமதி கொடுக்க மறுக்கிறார்கள். அமைச்சர் அவர்களிடத்தில் இதைப்பற்றி சொன்னேன். பெண்ணடம், திட்டகுடி போன்ற இடங்களில் வாய்க்கால் போகிறது. மின்சாரம் விஸ்தரிக்கப்படாமலிருக்கிறது. மோட்டார் செட் அமைத்துக்கொடுக்க வேண்டுமென்று சொன்னேன். **Chief Engineer** இந்த மாதிரி விஷயங்களை கால தாமதமின்றி கவனித்து ஆவன செய்ய வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

இது வரையில் மின்சாரம் பரங்கிப்பேட்டையில் **Private Company** மூலம் விஸ்தரிக்கப்பட்டு இருப்பதால் மின்சாரம் விஸ்தரிக்கப்படாமலிருக்கிறது. அங்கே 18,000-க்கு மேல் ஜனத் தொகை இருக்கிறது. அதற்கு **" Top priority "** கொடுத்து எப்படியாவது செய்து விடுகிறேன் என்று சொன்னார்கள். அதைக் கவனிக்க வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

சில கிராமப் பகுதிகள் எந்த விதமான **road link**-ம் இல்லாமல் இருக்கின்றன. ஐந்நூறுக்கு மேற்பட்ட ஜனத் தொகையுள்ள கிராமங்களில் பள்ளிக்கூடம் இருக்கவேண்டும். 100 அல்லது 200 ஹரிஜனங்கள் வீடு இருந்தால்கூட குடி கிணறுகள் கட்டிக்கொடுக்க வேண்டுமென்று உத்தரவு போட்டதனால்தான், பள்ளிக்கூடங்களும், கிணறுகளும் ஏற்பட்டு வருகின்றன. அதே மாதிரி எந்தக் கிராமத்திற்கும் ஒரு ரோடு '' லிங்க் " **(link)** இருக்க வேண்டுமென்று இருக்க வேண்டும். அரசாங்கமே முழுத் தொகையையும் கொடுத்து அந்த மாதிரி திட்டங்களை பூர்த்தி செய்ய வேண்டும்.

கல்விக்காக அதிகப் பணம் ஒதுக்கியிருக்கிறார்கள். பகல் உணவுக்காக ரூ. 20 லட்சமும், பின்தங்கிய வகுப்பினருக்கு சலுகை அளிக்க சென்ற வருஷத்தைவிட ரூ. 40 லட்சம் அதிகமாக ஒதுக்கி யிருக்கிறார்கள். ஹரிஜனங்களுக்கு 5,000 வீடுகள் கட்டுவதற்கு மானியமாக 27 லட்சம் ரூபாய்

ஒதுக்கி யிருக்கிறார்கள். இது போதாது. எங்கள் பிரதேசம் போன்ற டெல்டாப் பிரதேசங்களில், நியாய வாரச் சட்டம் வந்ததினால், ஹரிஜனங்கள் சௌகரியமாக வாழ வேண்டுமென்று நினைக்கிறார்கள். ஐயாயிரம் வீடுகள் என்றால், ஒரு ஜில்லாவுக்கு 500 வீடுகள்தான் வரும். தவிர, இப்பொழுது கொடுக்கப்படும் ரூ. 550 போதாது. இதை இன்னும் அதிகப்படுத்த வேண்டும். பாதித் தொகையை மான்யமாகவும், பாதியைக் கடனாகவும் கொடுத்து அதிகமாக வீடுகளைக் கட்ட வேண்டும்.

அடுத்தபடியாக, அநேக இடங்களில் விவசாயிகள் "டீசல்" எண்ணெயை உபயோகப்படுத்துகிறார்கள். விவசாயத்திற்காக உபயோகப்படும் டீசல் எண்ணெய்மீதுள்ள வரிக்கு விலக்கு அளிக்கவேண்டும். எவ்வளவு எஞ்சின்கள் இருக்கின்றன என்று கணக்கெடுத்து, மழை காலம் போக மற்ற காலங்களில் எவ்வளவு தேவைப்படுமோ, அதற்கு கூப்பன் கொடுத்து ஏற்பாடு செய்துவிடலாம்.

நிலத்திற்கு கூடிய சீக்கிரத்தில் உச்ச வரம்பு கட்டப்போவதாகச் சொல்லப்படுகிறது. ஆகவே, இப்பொழுது விவசாய வருமான வரி கொண்டு வரவேண்டியதில்லை. ஏற்கெனவேயே, 500 ரூபாய்க்கு மேல் தீர்வை செலுத்துகிறவர்களுக்கு வரி இருப்பதனால், சின்ன விவசாயிகளுக்கு கஷ்டம் ஏற்படும். கணக்கு வைத்துக்கொள்வதில் பல சிக்கல்கள் ஏற்படும். உணவு உற்பத்தி அதிகரிக்கவேண்டுமென்று சொல்லுகின்ற நேரத்திலே இந்த மாதிரி வரி விதிப்பை யோசனை பண்ணி செய்யலாமென்று சொல்ல விரும்புகிறேன்.

சிதம்பரத்தில் அண்ணாமலை ஸர்வகலாசாலை இருக்கிறது. விவசாயத்தைப் பாடமாக எடுத்துக்கொண்டு படிப்பவர்கள் 150 மாணவர்களுக்கு மேல் இருக்கிறார்கள். அங்கே 200 எக்கருக்கு மேல் நஞ்சை நிலமிருக்கிறது. கோயம்புத்தூரில் விவசாயக் கல்லூரி ஏற்பட்ட பிறகு அந்தப் பிராந்தியத்திலுள்ளவர்கள் விவசாயத்துறையில் முன்னேறி வருகிறார்கள். ஆகவே சிதம்பரத்தில் ஒரு விவசாயக் கல்லூரி ஏற்படுத்தினால் டெல்டாப் பகுதியிலுள்ள 2, 3 ஜில்லாக்களுக்கு சௌகரியமாயிருக்கும். இதற்கான வசதிகள் அண்ணாமலை ஸர்வ கலாசாலையிலிருக்கின்றன. சர்க்கார் தொகை கொடுத்து அதை விஸ்தரிக்கலாம். விவசாயத்தை "**professional course**" ஆக எடுத்துப்படிப்பவர்கள் 150 மாணவர்களுக்கு மேல் இருப்பதால், சிதம்பரம் யூனிவர்ஸிட்டியால் ஒரு விவசாயக் கல்லூரி ஏற்படுத்தவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

**4-50 p.m.** அடுத்தபடியாக பாதாள சாக்கடை திட்டத்தை சிதம்பரம் மாவட்டத்தில் இரண்டாவது ஐந்தாண்டு திட்டத்தில் முதலில் எடுத்துக்கொள்ள வேண்டும் என்று இந்த அரசாங்கம் திட்டம் வகுத்தார்கள். ஜனங்களுடைய கஷ்டத்தை உணர்ந்து அரசாங்கம் இதற்கு ப்ரையாரிட்டி கொடுக்க வேண்டும்; கொடுத்திருக்கிறார்கள். இந்த வருஷ பட்ஜெட்டில் அதற்கு பணம் ஒதுக்கவில்லை. அதனால் அதற்கு விசேஷ கவனம் செலுத்த வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். ஏனென்றால் அங்கு பாதாள சாக்கடை வசதி இல்லாமல் இருப்பதால் அங்கு வாதக்கால் நோய் (பிலேரியல்) அதிகமாக இருக்கிறது என்பதை அரசாங்கம் உணர்ந்திருக்கிறது.

சிதம்பரம் தாலூகாவில் ஹரிஜனங்களுக்கு மனைக்கட்டுக்கள் கிடைப்பது என்பது கஷ்டமாக இருக்கிறது. ஏனென்றால் அங்கே இருப்பவையெல்லாம் நஞ்சை நிலங்கள். ஹரிஜனங்களுக்கு மனைக்கட்டுக்களை வழங்குவதற்கு தனியாக ஒரு தாசில்தாரைப்போட்டு அங்குள்ள 300 கிராமங்களில் எந்தந்த கிராமங்களில் மனைக்கட்டுகள் இருக்கின்றனவோ அவைகளையெல்லாம் கணக்கெடுத்து கொடுக்க ஏற்பாடு செய்யவேண்டும். இப்பொழுது அப்படிப்பட்ட கணக்கும் எடுத்து வைத்திருக்கிறார்கள். அங்கு நஞ்சை நிலத்தை விலைக்கு வாங்க வேண்டியதாக இருப்பதால் ஹரிஜனங்களால் அதை வாங்க முடியவில்லை. அதுவும் சொந்தமாக வாங்க முடியவில்லை. அதனால் இந்த திட்டத்தை அரசாங்கமே எடுத்துக்கொண்டு ஹரிஜனங்களுக்கு மனைக்கட்டுகள் வழங்குவதற்கு நடவடிக்கை எடுத்துக் கொள்ள வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். இதைப்பற்றி

4th March 1958] [Sri G. Vagheesam Pillai]

அரசாங்கம் கவனித்து வந்தாலும் இதை இந்த வருஷத்திலேயே எடுத்து முடிக்கும்படியாக கேட்டுக்கொள்ளுகிறேன். அதற்கு என்று மூன்று அல்லது நான்கு லட்சம் ரூபாய் ஒதுக்கியாகிலும் அதை முடித்துக் கொடுக்க வேண்டும்.

சிதம்பரத்தில் ஆஸ்பத்திரி வசதி குறைவாக இருக்கிறது. அங்கு ஒரு யூனிவர்சிட்டி இருப்பதோடு அங்கு அநேகம் யாத்திரிகர்கள் வருகின்றார்கள். அப்படி வரக்கூடிய இடத்தில் ஆஸ்பத்திரி வசதி குறைவாக இருக்கிறது. சிதம்பரத்திற்கு கனம் மந்திரி அவர்கள் வந்தபோது இதைப் பற்றி குறிப்பிட்டேன். அதைப்பற்றி யோசிப்பதாகச் சொன்னார்கள். பொது மக்களும் அதைப்பற்றி சொல்லியிருக்கிறார்கள். இதற்கு வேண்டிய இடத்தையும் கேட்டவுடன் பார்த்து தேர்ந்தெடுத்துக் கொடுத்திருக்கிறார்கள். சுமார் பத்து அல்லது பதினைந்து எக்கர் நிலத்தை அதற்கு என்று ஒதுக்கியிருக்கிறார்கள். ஆகவே இந்த வருஷத்திலேயே அங்கு ஒரு ஆஸ்பத்திரி வசதியைச் செய்து கொடுக்க வேண்டும் என்று சொல்லிக் கொள்ள விரும்புகிறேன்.

குஷ்டரோகம் தென்னாற்காடு ஜில்லாவில் அதிகமாக இருக்கிறது. உலகத்திலேயே யூனிட்வாரியாக எடுத்துப்பார்த்தால் இந்த தென் ஆற்காடு ஜில்லாவை ஒரு யூனிட்டாக எடுத்துக்கொண்டு பார்த்தால் அங்கு தான் அதிகப்படியாக ஜனங்கள் குஷ்டரோகத்தால் பாதிக்கப்பட்டிருப்பது தெரிய வரும். இதைப்பற்றி நான் பல தடவை பல முறையில் சொல்லியிருக்கிறேன். பல அங்கத்தினர்களும் இதைப்பற்றி சொல்லியிருக்கிறார்கள். இப்பொழுது செங்கற்பட்டு ஜில்லாவில் ஒரு குஷ்டரோக ஆஸ்பத்திரியை அமைத்து ஆராய்ச்சியும் செய்து வருகிறார்கள். அப்படி அங்கு ஆரம்பித்து சிகிச்சையும் செய்து கொண்டு வருகிறார்கள். அதைப்போலவே தென்னாற்காடு ஜில்லாவிலும் ஒரு ஆஸ்பத்திரியை அமைத்துக்கொடுக்க வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். இங்கு ஆராய்ச்சி நிலையத்தை அமைக்க வேண்டியது அவசியம் இல்லை. அதை செங்கற்பட்டு ஜில்லாவிலேயே வைத்துக்கொள்ளலாம். இங்கு ஒரு ஆஸ்பத்திரியை அமைத்து ஜனங்களுக்கு சிகிச்சையை மட்டும் ஆரம்பித்தால் போதுமானது. இதற்கு கால தாமதம் ஆகக்கூடாது என்றும் கேட்டுக்கொள்ளுகிறேன். இதற்கு என்று தனியாக ஆஸ்பத்திரியை அமைக்காவிட்டாலும் இப்பொழுது இருக்கக்கூடிய தாலூகா ஹெட்குவார்ட்டர்ஸ் ஆஸ்பத்திரியில் குஷ்டரோகத்திற்கு சிகிச்சை செய்ய ஒரு பிரிவை அமைத்துக்கொடுத்து சிகிச்சையை ஆரம்பிக்க வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். அதற்கு வேண்டிய மருந்துகளையும் வாங்கிக்கொடுத்து டாக்டரையும் நியமித்துக் கொடுக்க வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். உலகத்திலேயே கணக்கெடுத்துப் பார்த்தால் அங்குதான் அதிகப்படியான ஜனங்கள் இந்த வியாதியினால் பாதிக்கப்பட்டிருப்பது நன்றாகத் தெரியும். அதனால் இதில் விசேஷ கவனம் செலுத்த வேண்டும் என்று நான் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

சிறு நில சொந்தக்காரர்களுக்கு விலக்கு அளிக்க வேண்டும் என்று பல முறை சொல்லிக்கொண்டு வந்திருக்கிறேன். இதையும் கவனத்தில் எடுத்துக்கொள்ள வேண்டும் என்று கேட்டுக்கொண்டு நான் இத்துடன் முடித்துக்கொள்ளுகிறேன்.

**Sri M. ANANDAN** : கனம் உதவி சபாநாயகர் அவர்களே, கனம் நிதி மந்திரி அவர்கள் கொண்டு வந்திருக்கக்கூடிய வரவு செலவு திட்டத்தைப்பற்றி என்னுடைய கருத்துகளை சொல்லுகிறேன். தேசிய விஸ்தரிப்புத் திட்டத்தின் கீழ் தென்னாற்காடு மாவட்டம் கள்ளக்குறிச்சி தாலூகாவில் சங்கரபுரம், பாக்கம், ரிஷிவந்தியம், துருகம் இதைப்போன்ற பல பிர்க்காக்கள் பிற்போக்கான நிலைமையில் இருக்கின்றன. இரண்டாவது ஐந்தாண்டு திட்டத்தின் கீழ் தேசீய விஸ்தரிப்புத் திட்டத்தை அந்த பிர்க்காக்களுக்கு பரப்பி அங்குள்ள விவசாயிகளையும் பின் தங்கிய வகுப்பினர்களையும், நல்ல முறைக்கு கொண்டு வருவதற்கு வேண்டிய நடவடிக்கைகளை எடுத்துக்கொள்ள வேண்டும் என்று சர்க்காரை நான் கேட்டுக் கொள்ளுகிறேன். ஏனென்றால் அந்தத் தாலூகாக்கள் ஏற்கெனவே அரசாங்கத்தினுடைய கவனக்குறைவால் மிக்க பின் தங்கிய பிர்க்காக்களாக

இருக்கின்றன. எற்கெனவே அங்கு சர்க்காருடைய கவனக்குறைவு அதிகமாக இருக்கிறது. அத்துடன் கூட அங்குள்ள காங்கிரஸ் அனுதாபிகள், இன்னும் மற்றவர்கள் அங்குள்ள ப்ளாக்குகளை மாற்றிவிட்டார்கள். திட்டகுடி, உளுந்தூர்பேட்டை பிர்க்காக்களை மாற்றி விட்டார்கள். ஆகவே அந்த பிளாக்கை இந்த நான்கு பிர்க்காக்களையும் அந்த திட்டத்தின் கீழ் கொண்டு வந்து பொது மக்களுக்கு நல்ல வகையில் பணியாற்ற வேண்டும் என்று நான் அரசாங்கத்தைக் கேட்டுக்கொள்ளுகிறேன்.

கல்வியைப் பொறுத்த மட்டில் எங்கள் தாலூகாவில் கல்வி நல்ல முறையில் இல்லை. ஏனென்றால் அங்கே ஹரிஜனப் பிள்ளைகளில் 100-க்கு 25 பேர்களுக்குக் கூட படிப்பு இல்லை. ஆகவே அவர்களுக்கு அங்கு கட்டாயக் கல்வி முறையை அமைத்து கல்விச்சாலைகளையும் அமைத்துக்கொடுக்க சர்க்கார் முன் வரவேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். அங்குள்ள ஹரிஜனப் பிள்ளைகளுக்கு பள்ளிக்கூடம் வருவதற்குக் கூட வசதி கிடையாது. அவர்களுக்கு வேண்டிய பொருள் இல்லை, வசதி இல்லை. பஞ்சம், பட்டினியால் அவர்கள் மிகவும் வாடி இருக்கிறார்கள். அதனால் அவர்கள் படிக்கக்கூட வசதி இல்லாமல் பள்ளிக்கூடம் செல்லாமல் இருக்கிறார்கள். அதனால் அவர்களுக்கு கல்வி வசதி செய்துகொடுக்க வேண்டியது அவசியமாக இருக்கிறது. ஆயிரம் ஜனத்தொகையுள்ள கிராமங்களில் தனியான பள்ளிக்கூடங்களை அமைத்து கட்டாய கல்வி முறையையும் கொண்டு வந்து ஹரிஜனங்களிடையே கல்வியை பெருக்குவதற்கு வேண்டிய நடவடிக்கைகளை எடுத்துக்கொள்ள வேண்டும் என்று நான் அரசாங்கத்தைக் கேட்டுக்கொள்ளுகிறேன். அத்துடன் ஏழை, பணக்கார பிள்ளைகளுக்கும் பின் தங்கிய வகுப்பினர் பிள்ளைகளுக்கும் போதிய உணவு கொடுக்க வேண்டும் என்றும் கேட்டுக்கொள்ளுகிறேன்.

இது போன்று சின்னச்சேலம், கள்ளக்குறிச்சி, சங்கராபுரம், திருவண்ணாமலை வழியாக ரோட்டு போட்டுக் கொடுத்து, அதையும் இரண்டாவது ஐந்தாண்டு திட்டத்தின் கீழ் போட்டுக்கொடுத்து, ரயில் பாதை வசதி செங்கல்பட்டு வழியாக செய்து கொடுத்தால் அங்குள்ள மக்களுக்கு வசதியாக இருக்கும். இது ஜனங்களுடைய போக்குவரத்துக்கு நன்மையாக இருக்கும் என்பதையும் தெரிவித்துக்கொள்ளுகிறேன். அத்துடன் சங்கராபுரத்திற்குப் பக்கத்திலுள்ள மூங்கில்துறைப்பட்டு பெண்ணை ஆற்றில் ஒரு பாலத்தையும் கட்டிக்கொடுக்கும்படியாக நான் அரசாங்கத்தைக் கேட்டுக்கொள்ளுகிறேன். இதையும் கட்டிக் கொடுத்தால் அங்குள்ள மக்களுக்கு வசதி ஏற்பட்டு போக்குவரத்துக்கும் வசதியாக இருக்கும் என்று சொல்லுகிறேன். இது போன்று கள்ளகுரிச்சி வடநந்தல் வழியாக போகக்கூடிய ஆற்றிற்கு ஒரு பாலம் கட்டிக்கொடுத்தால் அதுவும் அங்குள்ள மக்களுக்கு வசதியாக இருக்கும் என்பதையும் தெரிவித்துக் கொள்ளுகிறேன். அங்குள்ள மலை ஜாதியினர்களும் விவசாய மக்களும், மற்றவர்களும் இந்த வசதி இல்லாமல் இப்பொழுது கஷ்டப்பட்டுக்கொண்டிருக்கிறார்கள். அந்தக் கஷ்டத்தை நிவர்த்தி செய்யும்படியாக நான் கேட்டுக்கொள்ளுகிறேன்.

அடுத்தபடியாக நீர்ப்பாசனத்தைப்பற்றி குறிப்பிடும்போது நீர்பாசன வசதியைப்பற்றி மராமத்து மந்திரி குறிப்பிட்டிருக்கிறார். எங்கள் தாலூகாவில் மேட்டுப்பாங்கான பிரதேசம் அநேகம் இருக்கின்றன. அங்கு மூன்று ஆறுகள் மணியாறு, முத்தாறு, கோமுகாந்தி ஓடிக்கொண்டிருக்கின்றன. அந்த ஆறுகளில் சிறிய அணைகளைக் கட்டிக்கொடுத்தால் அருகாமையிலுள்ள ஏரிகளுக்கு அதிலுள்ள தண்ணீரை கால்வாய்களின் மூலமாகக் கொண்டுபோய் விவசாயத்திற்கு பயன்படுத்திக் கொள்ளுவதற்கு வசதியாக இருக்கும். அந்தப் பிராந்தியத்தில் இப்படிப்பட்ட சூலாங்குரிச்சி அருகாமையில் சிறு அணைகளைக் கட்டிக் கொடுத்தால் சுமார் 50 ஆயிரம் எக்கர் நிலத்திற்கு தண்ணீர் பாயும். வடக்குநந்தல் அருகாமையில் ஒரு கால்வாய் ஓடி வருகிறது. அதில் சதா காலமும் நீர் வற்றாமல் ஓடிக்கொண்டு வருகிறது. அங்கு ஒரு அணையைக் கட்டிக்கொடுத்து விவசாயிகளுக்கு உதவி செய்தால் சுமார் 300 எக்கர் நிலத்திற்கு தண்ணீர் பாய்வதற்கு வசதி ஏற்படும். இது போன்று இன்னும் சில ஆறுகள் இருக்கின்றன. அவைகளில் அணைகளைக் கட்டிக்கொடுத்து அவைகளுக்கு

4th March 1958] [Sri M. Anandan]

அருகாமையிலுள்ள ஏரிகளில் அந்தத் தண்ணீரை நிரப்பிக் கொடுத்தால் அங்குள்ள விவசாயிகளுக்கு விவசாயம் செய்வதற்கு சௌகர்யமாக இருக்கும் என்பதையும் தெரிவித்துக்கொள்ளுகிறேன். எங்கள் பிரதேசம் மேட்டுப் பிரதேசமாக இருக்கிறபடியால் இதைச் செய்து கொடுத்தால் வசதியாக இருக்கும். சில இடங்களில் சேரிக்குச் செல்வதற்கு வழியே கிடையாது. அதுவும் கள்ளக்குரிச்சியில் இப்படி வழி இல்லாமல் தாலூக்காவுக்கு போக வழியில்லாமல் வருந்தி கஷ்டம் அடைகிறுர்கள். ஹரிஜனமக்களின் நிலைமை உடனே கவனிக்கவும். மலைபக்கம் அங்குள்ள ஹரிஜனங்கள் மிகவும் கஷ்டப்படுகிறுர்கள். அங்கு ஒரு காட்டாறு வருகிறது. அக்கரா பாளையம் வடக்கநந்தல் வழி அங்கு ரோடுகள் இல்லாமல் இருப்பதால் தண்ணீர் வரும் காலங்களில் அங்குள்ள ஹரிஜனங்கள் போக்குவரத்து செய்வதற்கு வழியில்லாமல் கஷ்டப்படுகிறுர்கள். இதைப்பற்றி பலவித மான மகஜர்கள் கொடுக்கப்பட்டிருக்கின்றன. நாளது வரையில் அரசாங்கம் இதை கவனித்ததாகத் தெரியவில்லை. அங்கு ரோடு போடுவதற்கு கஷ்டமாக இருக்கிறது. கள்ளக்குரிச்சியில் மக்கான்தார் மானியம் அங்குள்ள நிலம் மானியமாக இருக்கிறது. அதனுல் அந்த நிலத்தை சர்க்கார் வாங்கி ஹரிஜனங்களுக்கு 3 சங்கலி தூரம் ரோடு போட்டுக்கொடுக்க வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். கள்ளக்குரிச்சியில் அங்குள்ள ஹரிஜனங்களுக்கு கிணறு இல்லாமல் கஷ்டப்படுகிறுர்கள். அங்கு 35 அடி ஆழத்தில் ஒரு ஆட்டின் பம்பு குழாய் உடனடியாக போட்டு கொடுக்க வேண்டும் என்றும் கேட்டுக்கொள்ளுகிறேன். அங்குள்ள பஞ்சாயத்துக்கு அப்படி செய்து கொடுக்கவேண்டும் என்று ஒரு உத்தரவு போட்டு அங்கு ஆட்டின் கைபிடி பம்பு செட்டு கிணற்றை வெட்டிக்கொடுக்க ஏற்பாடு செய்தால் அங்குள்ள ஹரிஜனங்களுக்கு குடி தண்ணீர் வசதியாக இருக்கும். இது போன்று பல இடங்களில் கிணறுகள் கிடையாது. ஹரிஜனங்களுக்கு வீடுகள் இல்லாமல் கிணறுகள் இல்லாமல் மிகவும் வருத்தம் அடைகிறுர்கள். சங்கராபுரம் பிர்க்கா புதுப்பேட்டை கிராமத்தில் விவசாயிகள் கலெக்டர் முன்னுல் ஒரு கூட்டம் போட்டு பல மகஜர்களைக் கொடுத்தார்கள். அங்கு வீடுகள் வழங்கப்படவேண்டும் என்று பல ஆயிரக்கணக்கான மகஜர்கள் அப்படிக் கொடுத்தார்கள். அவர்கள் ஆயிரக்கணக்கான மகஜர்களைக் கொடுத்தார்கள் வரி வஜா செய்யப்படவேண்டுமென்று. நிலம் இல்லாத ஏழைகள் நிலம் வேண்டுமென்று கேட்டு மகஜர்கள் கொடுத்தார்கள். வீடில்லாத ஏழை ஹரிஜனங்களும், பின்தங்கிய வகுப்பினர்களும் தங்களுக்கு வீடு கிடையாது, நிலம் கிடையாது என்று கலெக்டர் முன்னிலையில் பல விதமான விண்ணப்பங்களைக் கொடுத்தும் நாளது வரைக்கும் இந்த அரசாங்கம் அதைப்பற்றி யாதொரு நடவடிக்கையும் எடுத்தது கிடையாது.

5 p.m.

புதுப்பட்டு கிராமத்திலே 30 ஆயிரம் எக்கர் பஞ்சம தரிசு நிலம் இருந்தது. நானும் தாசில்தாரும் அந்த நிலங்களைச் சேரிவாழ் மக்களுக்கு 53 பிரிவாகப் பிரித்துக் கொடுத்துவிட்டு வந்தோம். அங்கே உடனடியாக காங்கிரஸ் அனுதாபிகள் சென்று அந்த 53 பாகத்தை 100 பாகமாகப் பிரித்து ஏதோ செய்யத்தவருக திட்டம் இட்டு வருவதாக வதந்தி இருந்துவருகிறது. அப்படியிருந்தாலும் அந்த 30 ஏக்கர் நிலத்தையும் ஏற்கெனவே பெற்றுக்கொண்ட 53 பேருக்குமே பட்டா செய்து கொடுக்க வேண்டுமென்று நான் கேட்டுக்கொள்ளுகின்றேன்.

அதைத் தவிர, இன்னும் இருக்கும் புறம்போக்கு தரிசு நிலங்களை பணக்காரர்கள் ஏழைகள் பேரால் பட்டா வாங்கி தாங்கள் எடுத்துக்கொள்வதாக வதந்தி வந்து கொண்டிருக்கிறது. அதையும் அரசாங்கம் உடனடியாகக் கண்டுபிடித்து, ஏழைகள் போடும் விண்ணப்பங்களை உடனடியாகக் கவனித்து, அவர்களுக்கு நிலம் போய்ச் சேரும்படியாக உடனடியாக ஆவன செய்யவேண்டுமென்று நான் அமைச்சர் அவர்களுக்குச் சொல்லிக் கொள்கிறேன்.

தற்சமயம் 5,800 ஜோடி காளை மாடுகளை ஹரிஜனங்களுக்குக் கொடுத்தாகக் குறிப்பிட்டிருக்கிறுர்கள். உண்மையிலேயே 5,800 ஜோடி காளை மாடுகளும் ஹரிஜனங்களுக்குக் கிடைக்கவே இல்லை. ஏனென்றுல், ஹரிஜனங்களை ஏமாற்றி, ஹரிஜனங்கள் பேரால் அந்தக் காளை மாடுகளை

பணக்காரர்கள் தான் வழக்கம்போல் வாங்கிக்கொண்டு, ஹரிஜனங்களை சும்மா அனுப்பிவிடுவது வழக்கம். நாட்டுப்புறங்களிலே இதே பழக்கமாக நடந்துகொண்டிருக்கிறது. ஹரிஜனங்களுக்காக அரசாங்கம் கொடுக்கும் கடன்கள் ஹரிஜனங்களுக்கே போய்ச் சேரும்படியாகவும், காளை மாடுகளும் ஹரிஜனங்களுக்கே போய்ச் சேரும்படியாகவும் ஏற்பாடு செய்து, அதற்குத் தகுந்த உத்தியோகஸ்தர்களைப் போடுவதற்கு திடீர் உத்தரவுகளை அரசாங்கம் போடவேண்டும். ஏனென்றால், நாட்டுப்புறங்களிலே சதா காலமும் பணக்கார மிராசுதார்கள் ஹரிஜனங்களை ஏமாற்றிக்கொண்டு வருகிறார்கள். ஏன் இப்படிச் சொல்கிறேன் என்றால், அங்கே ஜாதி வித்தியாசங்கள் அதிகமாக இருக்கின்றன. பள்ளிகளிலும் வித்தியாசம் தான், தபாலாபீசுகளிலும் வித்தியாசம் தான், சந்தை கூடும் இடங்களிலும் வித்தியாசம்தான். இம்மாதிரி பழக்கங்கள் அதிகமாக நடந்துகொண்டு வருகின்றன. கனம் மின்சார அமைச்சர் அவர்களுக்குக் கூட இது தெரியும். ஏனென்றால், அவர் சங்கராபுரத்திற்கு தண்ணீர் டாங்க் திறக்க வந்திருந்தார். மின்சாரம் சம்பந்தமாக அனேக விதமான மகஜர்களை அவரிடம் வாங்கிக் கொடுத்திருக்கிறேன். நாளது வரைக்கும் அவர் அவைகளின் பேரில் தக்க நடவடிக்கை ஒன்றும் எடுத்ததாகத் தெரியவில்லை. அங்கே நீர்ப்பாசன வசதி குறைவாக இருக்கிறது. ஆகவே, கனம் மந்திரி அவர்கள் உடனடியாக அங்கே மின்சார வசதியை ஏற்படுத்தி, அங்கே வாழும் விவசாயிகளுக்கும் குடியானவர்களுக்கும் அனுகூலமாக இருக்கும்பொருட்டு இன்னும் அதிகமான கிராமங்களில் மின்சாரம் வழங்க சாங்ஷன் செய்யவேண்டுமென்று நான் கேட்டுக்கொள்ளுகின்றேன்.

(இத்தருணம் டெபுடி ஸ்பீக்கர் தலைமை வகித்தார்).

**Sri M. R. KANDASWAMI MUDALIYAR** : உதவி சபாநாயகர் அவர்களே, நம்முடைய கனம் நிதி அமைச்சர் அவர்கள் கொண்டுவந்த பட்ஜெட்டை ஆதரித்து சில விஷயங்களைச் சொல்ல ஆசைப்படுகிறேன். நம்முடைய மாகாணத்தின் நிதி நிலைமையை அனுசரித்து, அமைச்சர் அவர்கள் எவ்வளவு வருவாய் வருகிறதோ அதை நல்ல முறையிலே தீர்க்கமாக ஆலோசனை செய்து, எந்த எந்த இனங்களுக்கு எவ்வளவு தொகை ஒதுக்கவேண்டுமோ அதன்படி ஒதுக்கி, எந்த எந்தக் காரியங்களை முன்னால் செய்யவேண்டுமோ, அதற்குத் தகுந்த முறையிலே பட்ஜெட்டைத் தீர்மானித்து நல்லதோர் பட்ஜெட்டை இங்கே சமர்ப்பித்திருக்கிறார்.

அதிலே குற்றங்குறைகள் இருக்கலாம். நம்முடைய தேவைகள் அதிகமாக இருக்கிறபடியினாலே, அதில் கண்டுள்ள திட்டங்கள் நமக்குப் போதாமல் இருக்கலாம். அதனாலேயே பட்ஜெட்டானது நல்ல முறையிலே இல்லை என்று குறை சொல்லக்கூடிய அங்கத்தினர்கள் சற்று யோசனை செய்து பார்க்க வேண்டியது அவசியம்.

நம்முடைய மாகாணத்தின் நிதி நிலைமை எவ்வளவு இருக்கிறதோ அந்த அளவிலேதான் பட்ஜெட்டைத் தீர்மானிக்க முடியுமே தவிர, பற்றாக் குறையிலே பட்ஜெட்டைத் தயாரித்து, திட்டங்களை முழுதும் நிறைவேற்றாமல், குறைந்த அளவிலே நிறைவேற்றுவதிலே பிரயோஜனம் இல்லை. திட்டங்களுக்குப் பணம் போதாமல் அவைகளை உருப்படாமல் செய்வதைவிட, வரக்கூடிய வருவாய்க்குத் தகுந்த முறையில் திட்டங்கள் தீட்டி, அவைகளை நல்ல முறையிலே நிறைவேற்றினால்தான், நம்முடைய அரசாங்கம் மக்களுக்கு நன்மை செய்ததாகச் சொல்ல முடியும். அந்த முறையிலே இப்பொழுது வந்துள்ள பட்ஜெட் அறிக்கை நல்லதோர் சந்தர்ப்பத்தை உண்டுபண்ணியிருக்கிறது. நன்கு ஆராய்ந்துதான் இந்த பட்ஜெட்டை நிதி மந்திரி அவர்கள் கொண்டுவந்திருக்கிறார்.

ஆனால், பல பேர்கள் சொல்லுகிறார்கள், இப்பொழுது போட்டிருக்கும் வரியானது கூடாது என்று. அடுத்தபடியாக, டீசல் எண்ணெய்க்கு வரி போட்டதைக் கண்டிக்கிறார்கள். எந்த வரி போட்டாலும் உடனே கண்டனம் தெரிவிக்கிறார்கள். அடுத்த வரியிலேயே மேலும் கோரிக்கை விடுகிறார்கள்—எங்களுக்கு ரோடு வசதி வேண்டும், மின்சார வசதி வேண்டும், அணைக்கட்டுகள் வேண்டும், ஆஸ்பத்திரிகள் வேண்டும், பள்ளிக்கூடங்கள் வேண்டும் என்று. பட்ஜெட்டிலே வரி விதிப்பைப்பற்றி எதிர்க்கும் அதே

4th March 1958] [Sri M. R. Kandaswami Mudaliyar]

மூச்சிலேயே மேலும் மேலும் வசதிகள் வேண்டுமென்று சொல்லுகிற அன்பர்கள் சற்று யோசித்துப் பார்க்கவேண்டும். அங்கத்தினர்களாகிய நாம் பொறுப்புடன் பேசவேண்டும். நாட்டுக்கு நல்லது செய்யக்கூடிய நிலைமையை உண்டுபண்ணி, மக்களுடைய வாழ்க்கைத் தரத்தை உயர்த்த நல்லதோர் சூழ்நிலையை உண்டுபண்ணுவதற்கேற்ப அங்கத்தினர்கள் பொறுப்புடன் கவனித்துப் பேசுவார்களானால் வெளியிலே உள்ள பொது மக்கள் நம்மைப் பொறுப்புள்ளவர்களாகக் கருதி நம்மீது நம்பிக்கை வைத்து, நாம் வகுக்கும் திட்டங்களை நிறைவேற்றுவதிலே ஒத்துழைப் பார்கள் என்பதை கனம் அங்கத்தினர்களும் யோசித்து நல்லதோர் முடிவுக்கு வரவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகின்றேன்.

அடுத்தபடியாக, இந்தச் சிறு சேமிப்பு ரொம்பக் கண்டிப்பான முறை யிலே, மக்களை கஷ்டப்படுத்தி, சர்வாதிகார முறையிலே வசூலிக்கப்படுவ தாக கவர்னர் உரைமீது விவாதிக்கக்கூடிய நேரத்திலும் சொன்னார்கள், இப்பொழுதும் அதைப்பற்றி பேசுகிறார்கள். அப்படிச் சொல்வது தூர திருஷ்டவசமானது. எங்களுடைய ஜில்லாவில்கூட, நானும் சர்க்கார் அதிகாரிகளுடன் இருந்து பல ஆயிரக்கணக்கான ரூபாய்களை வசூலித்துக் கொடுத்திருக்கிறோம். எந்த இடத்திலாவது வசூலிக்கக்கூடிய அதிகாரி கள் நிர்ப்பந்தப்படுத்தியோ, கட்டாயப்படுத்தியோ, கொடுத்தே ஆகவேண்டு மென்று வற்புறுத்துகிற முறையிலோ நடந்துகொண்டார்கள் என்று சொல்லமுடியாது. இதை நான் நிச்சயமாகச் சொல்ல முடியும்.

சிறு சேமிப்பு நிதிக்குப் பணம் கொடுக்கக்கூடிய சக்தி பல விவசாயி களுக்கு இருப்பதில்லை. பருவ காலத்தில் மழை பெய்யாததால், விவ சாயம் குன்றிப்போயிருக்கும் நிலைமையை உணர்ந்து, அவர்களுக்கு அதிகம் தொந்தரவு கொடுக்கக்கூடாதென்று கலெக்டர், தாசில்தார், டெபுடி தாசில் தார் போன்றவர்கள் விவசாயிகளை அதிகமாக வற்புறுத்திக் கேட்கவில்லை. விவசாயிகளாக இஷ்டப்பட்டு கொடுத்தால் வாங்கிக்கொள்ளவேண்டும், இல் லாவிட்டால், அவர்களுக்குக் கஷ்டம் கொடுக்கக்கூடாதென்று வற்புறுத் தாமல் இருந்தார்கள். ஆனால், ஒரு சில முதலாளிகளிடமோ, பணக் காரர்களிடமோ, பெரிய வியாபாரிகளிடத்திலோ அதிகாரிகள் சற்று கண் டிப்பாக இருந்து இந்த நிதிக்குத் தொகை வாங்கினால், அதைத் தவறு என்று அங்கத்தினர்கள் சொன்னால், எந்த முறையில்தான் இந்த ராஜ்யத்திலே போட்டிருக்கும் திட்டங்களை நிறைவேற்ற முடியும் என்று நான் கேட்கிறேன். பணக்காரர்களை இவ்வளவு ஆயிரம் ரூபாய் இத்தகைய நிதிக்குக் கொடுக்கவேண்டுமென்று கேட்காவிட்டால், அவர்களாகவே கொண்டுவந்து கொடுக்கக்கூடிய வழக்கம் எந்த ராஜ்யத்திலும் இல்லை என்பதைக் கண்கூடாகப் பார்க்கிறோம். அவர்களிடத்திலிருந்து ஓரளவு கண்டிப்பாகக் கேட்டால்தான் கொடுப்பார்கள். திட்டங்களுக்கு நிதி ஏராள மாக வேண்டியிருக்கிறது, அதற்காக ஓரளவு ஒத்தாசை செய்யவேண்டு மென்று சொன்னால்தான் அவர்கள் கொடுப்பார்கள். இது சர்வாதி காரமா? இது மிரட்டலா? இது அவர்களை ஏமாற்றுவதற்காகச் செய்யப் படுவதா என்று யோசித்துப் பார்க்கவேண்டும். எந்த அறிக்கையை, எந்த வேண்டுகோளை யார் விடுத்தாலும் தாங்களாகவே இந்த நாட்டு மக்கள் முன்வந்து பணத்தைக் கொடுத்துவிடுவார்கள் என்று நினைப்பது தப்பான கருத்தாகும். காங்கிரஸ்காரர்களுக்கு செல்வாக்கு இருக்கிறது என்றால் நாட்டு மக்களிடத்திலே போய்ச் சொல்லட்டும். சொன்னால் அவர் கள் பணத்தை எடுத்துக் கொடுத்தால் வாங்கிக்கொள்ளட்டும் என்று ஸ்ரீ நல்லசிவம் அவர்கள் சொல்லலாம். அது நடவாத காரியமும் கூட. எங்கள் பிர்க்காவில், தாலூக்காக்களில், ஜில்லாவில் மழை இல்லை. விவசாயம் பாதிக்கப்பட்டிருக்கிறது. அவ்விடத்தில் பெருந்தொகை எப்படி வசூல் செய்யமுடியும் என்று கேட்கிறேன். இப்போது பத்தாயிரம் ரூபாய் நன்கொடை ஒவ்வொரு கிராமங்களிலும் எதிர்பார்க்கிறோம். பணக்காரர் களிடம் கேட்காமல் எப்படி பணம் கிடைக்கும் என்று கேட்கிறேன். அரசாங்கத்தின் மீது பழி சுமத்தவேண்டும் என்பதற்காக எது வேண்டு மானாலும் சொல்லலாம் என்றால் அது நியாயமாகாது. சர்வாதிகாரத் தன்மையில் பணம் வசூலிப்பதாக அவர்கள் சொல்வது எனக்கு ஆச்சரிய மாக இருக்கிறது.

5-10 p.m.

இரண்டாவதாக உணவு உற்பத்திக்காக நமது பட்ஜெட்டிலே லட்சக் கணக்கான ரூபாய்களை ஒதுக்கியிருக்கிருர்கள். உணவு உற்பத்தி இந்த மாகாணத்தில் அதிகம் ஆகவில்லையென்று சொல்லமுடியாது. பவானி சாகர் வாய்க்கால், அமராவதி திட்டம் இவைகளினுல் புதிதாகப் பல ஆயிரக்கணக்கான ஏக்கர்கள் விவசாயம் செய்யப்படுகிறதா இல்லையா என் பதை கனம் அங்கத்தினர்கள் யோசித்துப்பார்க்கவேண்டும். கலெக்டர் முதற்கொண்டு தாசில்தார், கணக்குப்பிள்ளைவரையில் கொடுக்கிற புள்ளி விவரங்கள் சரியில்லையென்று எனது நண்பர் ஆசைத்தம்பி அவர் கள் சொன்னுர்கள். அவர்களே உண்மை நிலைமையை நன்ருக உணர்ந்து பார்க்கலாம். நாட்டில் இன்று இருக்கக்கூடிய நிலைமை நன்ருக உணர்ந்து பார்த்தால் எந்தவிதமான குற்றமும் சொல்வதற்கு இடமில்லாமல் வரவு செலவுக் கணக்கு அமைந்திருக்கிறது என்பதை மனப்பூர்வமாக ஒப்புக் கொள்ளவேண்டும். ஜப்பான் சாகுபடி முறைப்படி ஒரு ஏக்கருக்கு குறைந் தது 2,550 பவுண்டு நெல் விளைச்சல் விளைகிறது என்று குறிப்பிட்டிருக்கி ருர்கள். அதில் பாதிகூட நம் ராஜ்யத்தில் விளையவில்லையென்று சொன் ஞல் நாம் விவசாயத்தை அபிவிருத்தி செய்ய இன்னும் அதிகமான நடவடிக்கைகளை எல்லாம் எடுத்துக்கொள்ளவேண்டும் என்றுதான் கேட்டுக் கொள்கிறேன். அரசாங்கமும் இவ்விஷயத்தில் தீவிர முயற்சி எடுத்துக் கொள்ளவேண்டும்.

அதோடு விவசாயிகளுக்கு உதவி செய்யவேண்டும் என்பதற்கு அரசாங்கம் ஏராளமான பணத்தை ஒதுக்குகிருர்கள். பலவகையிலும் விவ சாயிகளுக்கு கடன் உதவி செய்ய அரசாங்கம் பணம் ஒதுக்குகிருர்களே தவிர, இவ்விஷயம் விவசாயிகளுக்குத் தெளிவாக அறிவிக்கப்படுவது இல்லை. கால்நடை அபிவிருத்திக்காக அரசாங்கம் எத்தனையோ காரியங் களைச் செய்துகொண்டிருக்கிறது. ஆனுல் இது ஒன்றும் கிராமங்களில் உள்ள மக்களுக்குப் பயன் அளிக்கவில்லை. கிராமங்களில் உள்ள கால் நடைகளுக்கு நோய் நொடிகள் வந்தால் உடனே வைத்தியம் செய்வதற் கும் வசதி கிடையாது. கிராமாந்திரங்களில் கால்நடை மருத்துவசாலை களை ஏற்படுத்தவேண்டும். கால்நடை ஆஸ்பத்திரிகள் கிராமங்களில் இல்லாத காரணத்தினுல் பத்துப் பன்னிரண்டு மைல்கள் நோய் வந்த மாடுகளை ஓட்டிச் செல்லும்போது அவை இறந்துகூட போகின்றன.

அதோடு இப்போது நமது அரசாங்கத்தாரால் போடக்கூடிய, நன்மை பயக்கும் பல திட்டங்கள் நகரப் பகுதிகளில் அதிகமாக இருக்கிறதே யொழிய, கிராமப் பகுதிகள் கவனிக்கப்படாமலேயே இருக்கின்றன. இரண் டாவது ஐந்தாண்டுத் திட்டத்திலும்கூட கிராமப் பகுதிகளில் உள்ள ரோடுகள் கவனிக்கப்படவில்லை. ஆஸ்பத்திரிகள் கவனிக்கப்படவில்லை. இன்னும் பலவிதமான கஷ்டநஷ்டங்கள் இருந்துகொண்டே இருக்கின்றன. ஆகவே உடனடியாக கிராமப் பகுதிகளில் எல்லாவகையான வசதிகளையும் செய்துகொடுக்க சர்க்கார் துரிதமான நடவடிக்கைகளை எல்லாம் எடுத்துக் கொள்ளவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

அடுத்தபடியாக கைத்தறித் துணியானது அதிகம் தேங்கிக் கிடக்கிறது என்று சொல்லப்படுகிறது. அந்தத் துணியை அதிகமாக உபயோகப்படுத்த வேண்டுமென்று மக்களிடத்தில் எல்லாக் கட்சிக்காரர்களும் பிரசாரம் செய் வதை ஒரு கொள்கையாக வைத்துக்கொண்டால் சீரும் சிறப்பும் பெற்ற அந்தத் தொழில் நிச்சயமாக ஓங்கும். எல்லாக் கட்சிக்காரர்களும் இத் துறையில் கவனம் செலுத்தவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

வெண்ணந்தூரில் ஆஸ்பத்திரி ஏற்படுத்த வேண்டுமென்று பல விண் ணப்பங்கள் போட்டிருக்கிறோம். அங்குள்ள மக்களுடைய சுகாதார வசதி யைக் கருதி உடனடியாக அங்கே ஆஸ்பத்திரியை நிருவ வேண்டும் என்பதாகக் கேட்டுக்கொள்கிறேன். இன்னும் அநேக விஷயங்கள் சொல்லவேண்டும். நாங்கள் பேசவரும்போது நேரமும் பத்து நிமிஷ மாகக் குறைக்கப்பட்டுவிடுகிறது. பின்னுல் சந்தர்ப்பம் கிடைத்தால் பேச லாம் என்று எண்ணி இத்துடன் முடித்துக்கொள்கிறேன்.

4th March 1958]

*** Sri M. K. SOMASUNDARAM :** கனம் உதவி சபாநாயகர் அவர்களே, நிதி அமைச்சர் அவர்கள் சமர்ப்பித்திருக்கும் பட்ஜெட்டை ஆதரித்துச் சில வார்த்தைகள் பேச முன் வந்துள்ளேன். பருவ மழை நன்ருகப் பெய்தது என்ருலும்கூட காலம் தப்பி, சரியான அளவு இல்லாத காரணத்தினுல் சிற்சில இடங்களில் பயிர் சேதமாகியிருக்கிறது. திருச்செந்தூர், ஸ்ரீவைகுண்டம் முதலிய இடங்களில் பயிர் நாசமாகிவிட்டது. பாபநாசம் டாமில் தண்ணீர் இருந்தும் பயிர்களுக்கு காலத்தில் தண்ணீர் விடாத காரணத்தினுல் பயிர்கள் நாசமாகியிருக்கின்றன. தண்ணீர் சரியாக விடாததற்குக் காரணம் இது சம்பந்தப்பட்ட இலாக்காக்கள் இரு மந்திரிகளிடத்தில் இருப்பதனுல் தக்க சமயத்தில் தண்ணீர் திறந்து விடுவதற்கு முடியாமல் போய்விட்டது. இவை இரண்டும் ஒரு அமைச்சரிடம் இருந்தால் உடனடியாக உத்தரவு போடுவதற்கு வசதியாக இருந்திருக்கும் என்று சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

அடுத்தபடியாக விவசாயத்தை நன்கு அபிவிருத்தி செய்யவேண்டுமென்ருல் பருவ காலத்தில் பயிர் செய்வது முதலில் அவசியமாகும். அதற்கு நல்ல விதைகள், உரங்கள் எல்லாம் காலத்தில் விநியோகிக்கப்படவேண்டும் ரசாயண-உரங்களை விநியோகிக்கும்போது அதிகாரிகள் அதை எவ்வாறு உபயோகிக்கவேண்டும் என்றும் பிரசாரம் செய்யவேண்டும். அப்போதுதான் விவசாய மக்கள் அதன் உபயோகத்தை நன்கு உணர்ந்து வாங்குவார்கள். உரங்களை கூட்டுறவு சங்கங்களின் மூலமாகவும் விநியோகிக்கவேண்டும். பயிர்களில் பூச்சி விழுவதைத் தடுப்பதற்கு ரசாயன உரங்களை எவ்வாறு உபயோகிப்பது என்பது விவசாயிகளுக்குத் தெரிவது இல்லை. அதிகாரிகள் மூலமாக அதையும் தெரியப்படுத்தவேண்டும்.

நீர்ப்பாசனம் சம்பந்தமாக அநேகம் அணைகள் கட்டப்படுகின்றன. அந்த அணைகளின் மூலமாகப் பல ஏக்கர் நஞ்சை சாகுபடி செய்வதற்கு வசதி இருக்கவேண்டும். குறிப்பாக மணிமுத்தாறு அணைக்கட்டு இப்போது திறந்துவிடப்பட்டிருக்கிறது. ஒரு தாலுக்காவில் இருந்து மற்ருெரு தாலுக்காவுக்குத் தண்ணீர் பாய்ச்சக்கூடாது என்ற தடை உத்தரவினுல் தகராறு ஏற்பட்டிருக்கிறது. இதனுல் வயல்களில் பயிர்கள் தீய்ந்துபோய்விட்டன. உடனடியாக எந்த எந்த அதிகாரிகளுக்கு எப்படி உத்தரவு போடவேண்டுமோ அவ்வாறு போட்டு பயிர் நாசமாகாதபடியாக சர்க்கார் கவனித்துக் கொள்ளவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். அதோடு அநேகம் நதிகள் கேரளா வழியாக அரபிக்கடலில் போய் விழுகிறது. அவற்றின் தண்ணீரைத் தேக்குவதற்கு ஏற்பாடு செய்தால் தக்க சமயத்தில் பயிர் செய்வதற்கு ஏதுவாக இருக்கும் என்று நான் நினைப்பூட்டுகிறேன்.

விவசாயிகளுக்கு கடன் கொடுக்க அரசாங்கம் முன் வந்திருக்கிறது. விவசாயிகளுக்கு கொடுக்கப்படும் கடன் அவர்களின் கையில் நல்ல முறையில் போய் சேருவதில்லை என்ற புகார் இருக்கிறது. ஆகவே, விவசாயிகளுக்குக் கொடுக்கப்படும் கடன் அவர்கள் கையில் நல்ல முறையில் போய் சேருவதற்கு வேண்டிய நடவடிக்கைகள் எடுக்கவேண்டுமென்று நான் அரசாங்கத்தினிடம் கேட்டுக்கொள்கிறேன். அடுத்தபடியாக, தேசிய விஸ்தரிப்புத் திட்டத்தின் கீழ் பல ரோடுகள் போடப்படுகிறது. கிராமங்கள் ஒன்றேடொன்று தொடர்பில்லாத நிலையில் இருப்பதால், ரோடு வசதி இல்லாததால், நல்ல முறையில் விவசாயத்தை அபிவிருத்தி செய்ய முடியாமல் இருக்கிறது. ஆகவே, குக்கிராமங்களில் நல்ல ரோடுபோடும்படி சம்பந்தப்பட்ட அதிகாரிகளுக்கு உத்தரவு போடும்படி மந்திரியவர்களை நான் கேட்டுக்கொள்கிறேன். அடுத்தபடியாக, மின்சாரம். மின்சாரம் கிராமங்களில் விஸ்தரிக்கப்படுகிறது. அதை மேலும் நல்ல முறையில் எல்லா கிராமங்களுக்கும் விரிவு படுத்த அரசாங்கம் வேண்டிய நடவடிக்கைகள் எடுப்பார்கள் என்று நான் நம்புகிறேன். அடுத்தபடி வீடு கட்டும் திட்டம். இந்த வீடு கட்டும் திட்டத்தில் பல சங்கடங்கள் இருக்கின்றன. திருநெல்வேலியில் இனும் கிராமங்கள் அதிகமாகயிருக்கிறது. அங்கு குடியிருக்கும் மக்கள், இனும் கிராமத்தில் இருப்பவர்களாதலால் அவர்கள் நிலத்தை சரியான முறையில் உபயோகப்படுத்திக்கொள்ள சக்தியற்றவர்களாக இருக்கிருர்கள். இனும் கிராமங்களில் ரோடுபோடுவது என்ருல் அதை அக்வயர் செய்ய சர்க்காரால் முடியாமல் இருக்கிறது. இனும் கிராமங்

5-20 p.m.

[Sri M. K. Somasundaram] [4th March 1958

களில் சர்க்கார் அதிகமாக தலையிட முடியாது என்று சொல்கிருர்கள். சர்க்காருக்கே தலையிடமுடியாது என்று சொன்னுல் சாதாரண மக்கள் அங்கு நடமாடவே முடியாமல் இருக்கிருர்கள். எது எப்படியிருந்தாலும், மக்களுக்கு தேவையான இடத்தை சர்க்கார் உடனடி அக்வயர் செய்து அந்த ஏழை மக்களுக்கு கொடுக்கவேண்டுமென்று நான் சர்க்காரை கேட்டுக்கொள்கிறேன். ஹரிஜனங்களுக்கு வீடு கட்டிக்கொடுக்கும் திட்டத்தின் கீழ், 200 ரூபாய் மான்யமாக கொடுக்கவேண்டுமென்று கேட்கிருர்கள். அந்த 200 ரூபாய் இருந்தால் அவனே தன் வீட்டை கட்டிக் கொள்ள முடியும். ஆகவே, நான் சொல்வது என்னவென்ருல், அந்தத் திட்டத்தின்கீழ் முழு பணத்தையும் சர்க்காரேபோட்டு வீடு கட்டிக் கொடுக்கவேண்டுமென்றும் நான் கேட்டுக்கொள்கிறேன். அடுத்தபடியாக, கோவில் நிலங்கள் பயிர் செய்யும் விவசாயத்தில், அவர்களுக்கு சரியான பங்கு கிடைப்பதில்லே. கோவில் நிலங்களே, ஏழை மக்களாக பார்த்து கொடுக்கும்படி என்டோமெண்ட் மந்திரியவர்கள் ஏற்பாடு செய்தால் நலமாயிருக்கும் என்று சொல்லிக்கொள்ளவிரும்புகிறேன். அடுத்தபடியாக, ஹரிஜனங்களுக்கு ஸ்காலர்ஷிப் கொடுத்து வருகிருர்கள். அதன்பேரில் பலயிடங்களில் பல தகராறுகள் ஏற்பட்டுவருகின்றன. ஒரு வருடத்தில், ஜூன் மாதம் பள்ளிக்கூடங்கள் திறக்கப்படுகிறது. ஆனுல் அவர்களுக்கு மார்ச் மாதம் ஆகியும்கூட ஸ்காலர்ஷிப் கிடைப்பதில்லே. ஒரு தனிப்பட்ட ஸ்தாபனம் நடத்தும் பள்ளிக்கூடம் என்ருல் அவர்கள் எத்தனே காலம் பொறுத்திருப்பார்கள். ஆகவே, உடனடியாக இந்தக் குறையை நிவர்த்தி செய்யவேண்டுமென்றும் மந்திரியவர்களே நான் கேட்டுக்கொள்கிறேன். ஒரு வருடம் கழித்து வீடு திரும்பும்வரையில் ஸ்காலர்ஷிப் ஸாங்ஷன் செய்து கிடைக்கவில்லே என்ருல் அது மிகவும் வருந்தத்தக்க காரியமாகும். ஆகவே, உடனடியாக, ஆறு மாதத்திற்குள்ளாகவாவது அவர்களுக்கு ஸ்காலர்ஷிப்போய் கிடைக்கும்படி ஏற்பாடு செய்யவேண்டுமென்று நான் அரசாங்கத்தை கேட்டுக்கொள்கிறேன். அடுத்தபடியாக, மாணவர் விடுதிகள் ஏற்படுத்தியிருக்கிருர்கள். ஒவ்வொரு ஜில்லாவிலும் பல விடுதிகள் சர்க்காரால் எடுத்துக்கொள்ளப்படவில்லே. ஆக, எல்லா விடுதிகளேயும் சேர்த்து ஒன்ருக ஆக்கினுல்தான் எல்லோரும் ஒற்றுமையாக இருக்க வழி செய்யமுடியும். எல்லாவற்றையும் சர்க்காரே ஏற்று நடத்தவேண்டும். தனிப்பட்ட ஸ்தாபனத்தின் கையில் இது இருக்கக்கூடாது. அடுத்தபடி கிணறுகள் வெட்டுவதில் சில சங்கடங்கள் இருக்கிறது. ஜாயின்ட் பட்டா இருக்கக்கூடாது என்று சொல்கிருர்கள். புருஷனுக்கும் மனைவிக்கும் ஓரிடத்தில் இரு பட்டாக்கள் இருந்தால், ஜாயின்ட் பட்டாவாக இருந்தால் அந்த இடத்தில் அவர்களுக்கு கிணறு தோண்ட வசதியில்லாமல் போய்விடுகிறது. ஆகவே, அவர்களுக்கும் மான்யத் தொகையில் இருந்து கிணறு வெட்டிக்கொள்ள சந்தர்ப்பம் கொடுக்கவேண்டுமென்றும் நான் சர்க்காரைக் கேட்டுக்கொள்கிறேன். அடுத்தபடியாக, மாடு பிடித்துக் கொடுப்பது. அது நல்ல ஒரு திட்டந்தான். ஆனுல் அதற்கு ஒரு ஊரில் இருந்து 10 பேர்கள் மனு போட்டால் அதை யாருக்கு என்று கொடுப்பது. திருநெல்வேலியில் மாடு பிடித்துக்கொடுப்பதற்கு எவ்வளவோ பேர்கள் மனுப் போட்டிருக்கிருர்கள். வந்த மனுக்களே எல்லாம் சேர்த்து அவைகளே குலுக்கிப் போட்டு யாருக்கு வருகிறதோ அவருக்கு கொடுக்கவேண்டுமென்று ஒரு ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. அது நல்லதுதான். கிராம அதிகாரிகள் விளேவித்த சங்கடங்களினுல்தான் இந்தமுறை ஏற்பட்டது. கடைசியாக, புகையிலே அபிவிருத்திக்காக அதிகமாக தொகை ஒதுக்கப்பட்டிருக்கிறது. வெர்ஜீனியா புகையிலே, கோதாவரி, கிருஷ்ணு போன்ற ஜில்லாக்களில்தான் சாகுபடியாகிறது. அப் புகையிலே சாகுபடியை நம் மாகாணத்திலும், பல இடங்களில் சாகுபடி செய்ய, அதன் அபிவிருத்திக்கு வேண்டிய காரியங்களே செய்ய அரசாங்கம் முன் வரவேண்டுமென்றும் நான் கேட்டுக்கொண்டு, இந்த சந்தர்ப்பத்தை கொடுத்த தலைவர் அவர்களுக்கு எனது நன்றியைத் தெரிவித்துக்கொண்டு எனது உரையை முடித்துக்கொள்கிறேன். வணக்கம்.

*SRI N. MARUDACHALAM: கனம் உதவி சபாநாயகர் அவர்களே, கனம் அமைச்சர் அவர்கள் கொண்டுவந்துள்ள வரவு செலவுத் திட்டத்தின் மீது நான் சில விஷயங்களே குறிப்பிட விரும்புகிறேன்.

4th March 1958] [Sri N. Marudachalam]

அதாவது, இன்று ஹரிஜனங்களுக்காக ஒதுக்கப்பட்ட தொகை, 2 கோடி, 33 லட்சமாகும். இந்த 2 கோடி 33 லட்சம் ரூபாய் சென்ற நடப்பு வருஷத்தைக்காட்டிலும் நாற்பது லட்சம் அதிகம் என்று குறிப்பிடப் படுகிறது. அதே சமயத்தில் 1957–58 ம் வருடம் ஒதுக்கப்பட்ட தொகை 2 கோடி 42 லட்சமாகும். அதில் இருந்து இந்த வருடம் ஒதுக்கப்பட்டி ருக்கும் தொகை 1957–58-ம் வருஷத்தைவிட, அந்த வருடம் ஒதுக்கப் பட்ட தொகையைவிட 9 லட்சம் குறைவாகிறது. திருத்தியமைக்கப்பட்ட பட்ஜெட்டில் இதன்பேரில் 40 லட்சம் அதிகம் என்று கூறப்படுகிறது. இந்த 2 கோடி 33 லட்சம் ரூபாயை இந்த சென்னை மாகாணத்தில் உள்ள ஹரிஜனங்களை கணக்கிட்டுப் பார்த்தால் ஏறக்குறைய இம் மாகாணத் தில் ஹரிஜனங்கள் ஜனத்தொகை கிட்டத்தட்ட 60 லட்சம் இருக்கிறது. இந்த 60 லட்சம் ஹரிஜனங்களுக்கு இந்த 2 கோடி 33 லட்சம் ரூபாயை பகிர்ந்து கொடுத்தால் தலைக்கு 4 ரூபாய்கூட வருவது கஷ்டம். இவ்வளவு குறைவான ஒரு தொகையைக்கொண்டு ஹரிஜன மக்களை எப்படி முன் னேற்றம் அடையச்செய்யமுடியும் என்று நான் கேட்கிறேன். ஹரிஜன முன்னேற்றத்திற்காக பல திட்டங்கள் வகுக்கப்படுகின்றன. ஹரிஜனங்க ளுக்கு மாடு வாங்கிக் கொடுப்பது ஒன்று. ஹரிஜனங்களுக்கு பின் ஸ்காலர் ஷிப் கொடுப்பதுபோன்ற பல திட்டங்கள் இருக்கின்றன. இத்திட்டங் களினால் ஹரிஜனங்கள் எவ்வளவு முன்னேறியிருக்கிறார்கள் என்று பார்த் தால் அவர்கள் எந்தவிதமான முன்னேற்றமும் அடைவதாகக் காண வில்லை. மதுக்கரை பிர்க்காவுக்கும், மதுரைக்கும், கோவைக்கும் 80 ஜோடி மாடுகள் வாங்கிக் கொடுக்க திட்டமிட்டிருக்கிறது. அதில், ஒரு ஜோடி மாடு 250 ரூபாய்க்கு வாங்க வேண்டும். அப்படி 250 ரூபாய்க்கு ஒரு ஜோடி மாடு வாங்கிக் கொடுப்பதோடு 35 ரூபாயும் கையில் விதைக்காக கொடுக்கிறார்கள். அதாவது அதன் தீவனத்திற்காக. இந்த மாட்டை வைத்துக்கொண்டு உழும்போது மாட்டை தள்ளிக்கொண்டுதான் போக வேண்டும்—அதன் பின்னால் கொஞ்சம் நாட்களுக்குப் பிறகு அதை கசாப் புக்கடைக்குத்தான் கொண்டுபோகவேண்டும். அந்த நிலைமையில்தான் இருக்க முடியும்—இன்று உழுவதற்கு தகுதியான மாடாக வாங்கவேண்டு மென்றால் ஒரு மாட்டுக்கு 200 ரூபாய் 250 ரூபாய் கொடுக்கவேண்டும். ஆகையினால்தான் இந்த திட்டத்தில் அதிகப்படியான பணம் போனாலும் தாழ்த்தப்பட்ட மக்களுக்கு நல்ல மாடுகளை வாங்கி கொடுக்கவேண்டும். அதல்லாமல் மோசமான மாடுகளை இவர்களுக்கு வாங்கிக் கொடுப்பது என்பது அவர்களை உயர்த்துவதாக இருக்காது. மேலும் ஒரு வருஷத்தில் அவன் அந்த மாட்டை கசாப்பு கடைக்கு கொண்டுபோக வேண்டியது தான். இது தவிர ஹரிஜனங்களுக்கு ஸ்காலர்ஷிப் கொடுக்கப்பட்டு வரு கிறது. இவ்விதம் கொடுக்கிற பணம் காலாகாலத்தில் மாணவர்களுக்கு கிடைப்பதில்லை. அதாவது இப்போது பிப்ரவரி 28-ம் தேதிவரையிலும் மாணவர்களுக்கு கொடுக்கப்படவில்லை. 27-ம் தேதியன்று ஸிட்டி முனிசி பல் ஹைஸ்கூல் மாணவர்கள் அங்குள்ள கலெக்டர் அவர்களிடம் தூது கோஷ்டியாகப்போய் சொன்னார்கள். அதற்கு உடனடியாக வேண்டியது செய்வதாக சொன்னார்கள். இம்மாதிரியாக ஸ்காலர்ஷிப் சரியான காலத் தில் கிடைக்காமல் இருப்பதினால் அந்த ஸ்கூலில் இருக்கின்ற ஹெட் மாஸ்டர்கள் மாணவர்களை வெளியே போகும்படியாக கட்டளையிடுகிறார்கள். ஆகவே இந்த ஸ்காலர்ஷிப் பணம் உடனடியாக கிடைப்பதற்கு வேண்டிய ஏற்பாடு செய்யவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். அடுத்தபடியாக ஹரிஜனங்களுக்கு கிணறுகள் வெட்டிக் கொடுப்பதாக சொல்லப்படுகிறது. நான் ஆறு மாதங்களுக்கு முன்னால் தெறமநல்லூர் பகுதியில் கிணறு கள் வெட்டி கொடுக்கவேண்டும் என்று நாலைந்து தடவைகள் சொல்லி யிருக்கிறேன். அதற்கு ஒருவித நடவடிக்கையும் எடுக்கவில்லை என்று தோன்றுகிறது. இம்மாதிரியான காரியங்களில் ஹரிஜனங்களைப்பற்றி சிந் திப்பது இல்லை. இதைப்பற்றி சொல்லிக்கொண்டிருப்பது வழக்கமாக இருந்துகொண்டுவருகிறது. ஹரிஜனங்களைப்பற்றி பிரமாதமாக பேசிக் கொண்டிருக்கிறார்களே தவிர, அவர்களுக்கு காரியங்களை செய்து கொடுக் கப்படவில்லை. ஏதோ பொது ஜனங்களிடத்தில் பிரமையை உண்டாக்கு வதற்காகத்தான் பட்ஜெட் உரையில் ஹரிஜனங்களைப்பற்றி பிரமாதமாக சொல்லப்பட்டிருக்கிறது. ஆகவே ஒதுக்கியிருக்கின்ற பணத்தையாவது அவர்களுக்கு காலாகாலத்தில் கிடைப்பதற்கு கவனம் செலுத்தி அதை

5-30 p.m.

[Sri N. Marudachalam] [4th March 1958

வினியோகம் செய்வதற்கு வேண்டிய நடவடிக்கைகள் எடுக்க வேண்டு மென்று கேட்டுக்கொள்கிறேன். இம்மாதிரி ஸ்காலர்ஷிப் கொடுக்கப்படும் விஷயத்தில் எல்லா ஹரிஜன குழந்தைகளுக்கும் இந்த ஸ்காலர்ஷிப் கிடைக்க வழி செய்யவேண்டும். குறிப்பாக சிங்கநல்லூர் பகுதியில் அங்கு 272 ஹரிஜன மாணவர்களில் 30 பேர்களுக்குத்தான் ஸ்காலர்ஷிப் கொடுக்கப்பட்டு வருகிறது. அங்குள்ள ஷிட்டி முனிசிபல் ஹைஸ்கூலில் 87 பேர்கள் படிக்கிறார்கள். அதில் ஸ்காலர்ஷிப் கொடுத்திருப்பது 35 பேர்களுக்குத்தான். இவ்விதம் ஒவ்வொரு ஸ்கூலேயும் எடுத்துக் கொண்ட டால், 30 பேர்கள் அல்லது 20 பேர்கள் அல்லது 10 பேர்கள் என்றுதான் கொடுக்கப்பட்டு வருகிறது. இந்த ஸ்காலர்ஷிப் எல்லா மாணவர்களுக்கும் கிடைப்பதில்லே. இவைகளே நான் நேரடியாகப் போய்பார்த்திருக்கிறேன். ஆகவே இதை கவனித்து நடவடிக்கை எடுக்கவும்.

(Bell)

DEPUTY SPEAKER : உங்களுடைய டைம் கழிந்துவிட்டது.

*Sri N. S. RAMALINGAM : கனம் உதவி சபாநாயகர் அவர்களே ! நிதி அமைச்சர் அவர்கள் கொண்டு வந்திருக்கும் வரவு செலவு திட்டத் தில் நல்ல பல அம்சங்கள் இருப்பதினால் அதை வரவேற்கிறேன். நம் ராஜ்யம் பல துறைகளில் குறிப்பாக விவசாயத்துறையிலும், கைத்தொழில் துறையிலும் முன்னேற்றமடைவதற்காக பல திட்டங்கள் போடப்பட்டிருப் பதை நான் வரவேற்கிறேன். தேசீய விஸ்தரிப்பு திட்டம், சமுதாய நல அபிவிருத்தி திட்டம் முதலிய திட்டங்கள் பல இடங்களுக்கு மேலும் விஸ்தரிக்கப்படும் என்று சொல்லப்பட்டிருக்கிறது. அவ்விதம் விஸ்தரிக் கப்படும்பொழுது, நாகபட்டிணம் தொகுதியை அதில் சேர்த்து அதை திருத்தம் செய்யவேண்டியது மிக அவசியம் என்பதைச் சொல்ல ஆசைப் படுகிறேன். அதன் சுற்றுவட்டாரங்களில் இம்மாதிரியான திட்டங்களே விஸ் தரித்து அப்பகுதிகள் சீர்திருத்தமடைந்திருக்கிறது. நேற்றைய தினம் கனம் திருத்துறைப்பூண்டி அங்கத்தினர் அவர்கள் பேசும்பொழுது குறிப் பிட்டார்கள். அதாவது கடலுக்குப் போகும் தண்ணீரைக்கொண்டு ஆயிரக் கணக்கான ஏக்கர்களே சாகுபடி செய்ய வசதி இருக்கிறது என்று குறிப் பிட்டார்கள். மற்றவர்கள் உபயோகித்ததின் பின்னல் கடலில் போகும் தண்ணீரைக் கொண்டு போய் பாய்ச்சுவதற்கு வசதி ஏற்படுத்தினல் அதன் மூலம் சாகுபடி செய்து அதிக உணவு உற்பத்தியை பெருக்கி கொள்ள முடியும். அதன் மூலம் நாட்டில் சுபீட்சம் ஏற்படுவதற்கு வழி இருக்கிறது. அதற்கு இப்போது மராமத்து இலாகாக்காரர்கள் பரிசீலனே நடத்தி வருகி ருர்கள். அதற்காக அவர்களுக்கு வந்தனம் தெரிவித்துக்கொள்வதுடன் மராமத்து இலாகா அமைச்சர் அவர்கள் இதற்கு கூடிய சீக்கிரமே வேண் டிய நடவடிக்கைகள் எடுக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். அடுத்தபடியாக சாலே போக்குவரத்துக்காக 2 கோடி ரூபாய் ஒதுக்கப்பட் டிருப்பதை வரவேற்கிறேன். இவைகள் நல்ல முறையில் போடப்பட்டிருப் பதைப்பார்த்து மகிழ்ச்சியடைகிறேன். இதில் முக்கியமாக கடலோரமாக ரோடுகள் போடக்கூடிய திட்டம் முன்பே இருந்து வருகிறது. அதில் வேதாரண்யம்—வேளாங்கண்ணி திட்டம் இதுவரை நிறைவேறவில்லே. அதோடு நாகப்பட்டிணத்திலிருந்து தொண்டி வரையில் ரோடு ஏற்படுத்த வேண்டும் என்கிற திட்டமும் நிறைவேறவில்லே. அதை உடனே நிறை வேற்ற வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். நாகப்பட்டிணம் துறை முகம் முக்கியமான துறைமுகமாக இருக்கிறது. இன்றைக்கு பல சிறிய துறைமுகங்களே சீர்படுத்துவதற்காக திட்டமிடப்பட்டிருக்கிறது. அதற்காக இந்த அமைச்சரவையை நான் பாராட்டுகிறேன். இப்போது நாகப்பட்டி ணம் துரைமுகம் சீர்கேடான நிலைமையில் இருந்துகொண்டிருக்கிறது. இதை சீர்திருத்தவேண்டும். மைனர் போர்ட் என்னும் தலைப்பில் பணம் இருக்கிறது. நாகப்பட்டிணம் துறைமுகத்தை எடுத்துக்கொண்டால் குறிப் பாக சிங்கப்பூர், மலேயா போன்ற இடங்களிலிருந்து வருகின்ற கப்பல்கள் கழிந்த இரண்டு மூன்று மாதங்களாக வந்து இறங்குவது கிடையாது. ஏனென்றால் அங்கிருந்து வருகின்ற கப்பல் மூலம் "ப்ளூ" காய்ச்சல் வந்துவிடும் என்றும் அதை பரிசோதிக்க டாக்டர்கள் இல்லே யென்றும் அதற்கான வசதிகள் இல்லே என்றும் சொல்லப்படுகிறது. இதனல் நாகப்பட்டிணத்தில் வந்திறங்கவேண்டிய பிரயாணிகள் சென்னே

யில் வந்து கஷ்டப்படவேண்டியிருக்கிறது. ஆகவே, இங்கிருந்து இரண்டு மூன்று டாக்டர்களை அனுப்பி வைத்தால் அங்கே கப்பல் நிற்க முடியும். அதன் மூலம் ஆயிரக்கணக்கான தொழிலாளர்கள் வேலையில்லாத கஷ்டத்திலிருந்து விடுபட்டு அவர்கள் வாழ்வதற்கு வசதியாக இருக்கும். ஆகவே இங்கிருந்து இரண்டு மூன்று டாக்டர்களை நாகப்பட்டிணம் துறைமுகத்திற்கு அனுப்பிவைக்க வேண்டுமென்றுக் கேட்டுக்கொள்கிறேன். அடுத்தபடியாக நாகப்பட்டிணம் முனிஸிபாலிட்டியால் சென்ற 40 வருடங்களுக்கு முன்பு போடப்பட்ட பைப்புகள் எல்லாம் இன்று துரு பிடித்து தண்ணீர் சுத்தமாய் கிடைப்பதில்லை. ஆகவே, இதை மாற்றுவதற்கு அந்த முனிஸிபாலிட்டிக்கு இலவசமாக பண உதவி கொடுக்காவிட்டாலும் கடனாக பணம் கொடுத்து உதவி செய்ய வேண்டுமென்று அரசாங்கத்தைக் கேட்டுக்கொள்கிறேன். அடுத்ததாக ராமனாதபுரத்தில் ஒரு கால் நடைப் பண்ணை ஆரம்பிக்கப்போவதை நான் வரவேற்கிறேன். அதே சமயத்தில் தஞ்சாவூர் ஜில்லாவில் திருத்துறைப்பூண்டி பகுதியில் உம்பளச்சேரி என்ற ஒரு நல்ல ரகம் இருக்கிறது. இவைகளை இரண்டு தொழிலுக்கும் பயன்படுத்தலாம். உழவுக்கும் வண்டியில் போடுவதற்கும் பயன்படுத்தலாம், நல்ல உழைக்கக் கூடியது. சிக்கனமாகவே இதை வைத்து காப்பாற்றலாம். மேலும், அங்கு ஒரு கால்நடை பண்ணை ஆரம்பிப்பதற்கு 60 ஏக்கர் நிலம் கொடுக்க ஒரு அன்பர் முன் வந்திருக்கிறார். அதை அரசாங்கம் பயன்படுத்தி கால்நடை பண்ணை ஏற்படுத்த வேண்டும் என்று அரசாங்கத்தைக் கேட்டுக்கொள்ளுகிறேன்.

5–40 p.m.

தஞ்சையிலே மருத்துவக் கல்லூரியும் மற்ற கல்லூரிகளும் வருவதைக் கேட்க சந்தோஷப்படுகிறேன். அதுவும் இந்த வருஷத்திலேயே ஆரம்பிக்கப்படுவதைக்கேட்டு நம் முதலமைச்சருக்கும் மற்ற அமைச்சர்களுக்கும் நான் வந்தனத்தைத் தெரிவித்துக் கொள்ள விரும்புகிறேன்.

இந்த பட்ஜெட்டிலே சில சலுகைகள் கொடுக்கப்பட்டிருக்கின்றன. உதாரணமாக விவசாய இலாகா டெமான்ஸ்டிரேட்டர்கள் சம்பளம் உயர்த்தப்பட்டிருக்கிறது. இதை நான் வரவேற்கிறேன். கெஜட் பதிவில்லாத அரசாங்க ஊழியர்களின் குழந்தைகளுக்கு படிப்புச் சலுகை கொடுக்கப்பட்டிருக்கிறது. அவர்களுக்கு மத்திய சர்க்கார் ஊழியர்கள் வாங்கும் அளவுக்கு சம்பளம் கொடுக்க அரசாங்கம் முன் வரவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

அடுத்தபடியாக, உணவு உற்பத்திப் பெருக்கத்திற்காக தேசீய அபிவிருத்தித் திட்டங்கள் மூலம் அரசாங்கம் செய்து வருவதைப் பாராட்டுகிறேன். இன்னும் அதிகமான உணவு உற்பத்தி செய்வதற்கு அரசாங்கம் வழி செய்யவேண்டும்.

பூச்சி மருந்துக்காக பல லட்ச ரூபாய் செலவு செய்யப்படுகிறது. இந்த பூச்சி மருந்து பெஸ்ட் அபெக்டெட் ஏரியாவிற்குத்தான் கொடுக்கப்படுகிறது. அவ்வாறு செய்வதால் பல கஷ்டங்களிருப்பதால் ஜூலை மாதம் முதல் டிஸம்பர் மாதம் வரை பூச்சி மருந்துகளை எல்லா இடங்களிலும் அரசாங்க சலுகையுடன் விற்க ஏற்பாடு செய்யவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். வயல்களில் எலித் தொல்லையை ஒழிக்க ஆந்திரா, பஞ்சாப், காஷ்மீர் முதலிய ராஜ்யங்கள் மத்திய சர்க்காரிடமிருந்து உதவி வாங்க ஏற்பாடு செய்திருக்கின்றன. சென்னை ராஜ்யமும் இந்த மாதிரி உதவி வாங்க ஏற்பாடு செய்யவேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். ஸாயில் டெஸ்ட் லெபரேட்டரி ஆந்திராவில் மூன்று வைக்கப்பட்டிருக்கின்றன. நம் நாட்டில் ஒன்றே ஒன்றுதான் இருக்கிறது. இன்னும் ஒன்றுவது வைக்க ஏற்பாடு செய்யவேண்டும். அதுவும் கூடிய சீக்கிரத்தில் தஞ்சையிலேயே வைக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

அடுத்தபடியாக புது வரியைப் பற்றி நான் சில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். பட்ஜெட்டைப் பார்த்தால் இப்போது புதிய வரிகளைப் போடுவதற்காகவே தயாரிக்கப்பட்டதுபோல் தோன்றுகிறது. சில துறைகளில் வருகிற வருமானம் குறைத்துப் போடப்பட்டிருக்கிறது என்று சிலர் அபிப்பிராயப்படுகிறார்கள். இதைப்பற்றி யோசிக்கவேண்டும். சென்ற

வருஷம் 333 லட்சம் ரூபாய் துண்டு விழுமென்று கணக்கிட்டு அதைச் சும்மா விட்டிருந்தும், இந்த ஆண்டு 105 லட்சம் தான் துண்டு விழு மென்றிருக்கும் போது ஏன் வரி போடவேண்டும்? அப்படியே விட்டு விட்டால் சென்ற வருஷம் அதிக வருமானம் வந்து துண்டு விழுந்தது உபரியானது மாறியது போல் இந்த வருஷமும் உபரியாகிவிடுமென்று சொல்ல விரும்புகிறேன். இதை அப்படியே அன்கவர்ட் ஆக விட்டு வைக்கலாம். அரசாங்கம் இப்போது நிலத்திற்கு உச்ச வரம்பு கட்ட வேண்டுமென்று எண்ணிக் கொண்டிருக்கும்போது அக்ரிகல்சுரல் இன்கம் டாக்ஸ் வேண்டுமா என்று அரசாங்கம் யோசிக்க வேண்டும். இப்போது அரசாங்கத்திற்குப் பணம் வேண்டுமென்றால் வேறு வழிகள் இருக்கின் றன. இப்போது ரீசெட்டில்மெண்ட் செய்து 30 வருஷம் ஆகின்றது. 1930-ல் ரீசெட்டில்மெண்ட் செய்திருக்கவேண்டும். அப்போது விலை குறை வாக இருந்ததால் ரீசெட்டில்மெண்ட் செய்யவில்லை. அதை இப்போது செய்தால் அரசாங்கத்திற்கு வரும் பணம் அதிகமாகும்.

அதிலும் இந்த விவசாய வருமானத்தைப்பற்றி அதிகம் சொல்ல வேண்டியதில்லை. அது ஒரு நிலையற்ற வருமானம். விவசாய வருமானவரி விதிப்பதில் அதிகத் தொல்லை இருப்பதைப்பற்றி ரெவினியூ மந்திரி அவர்கள் லேண்ட் ரெவுனியூ சர்சார்ஜ் பற்றிச் சொல்லும்போது சொல்லி யிருக்கிறார்கள். அதனால் இவ்வளவு தொல்லை இருக்கும்போது இதைக் கொண்டுவரவேண்டுமா என்று கேட்கிறேன். சிறிய மிராசுதார்கள் கணக்கு வைக்க அவசியமில்லையென்று சலுகை கொடுக்கப்பட்டிருக்கிறது. இது அபாயகரமான சலுகை. மதிப்பிடும் காரியத்தை உத்தியோகஸ்தர்களி டம் கொடுத்தால் ஏழை விவசாயிகள் வற்புறுத்தப்பட்டு மிகவும் கஷ்டப் படுவார்கள். அதைப் பார்க்கும்போது, அவர்களைக் கணக்கு வைத்துக் கொள்ளச் சொல்லலாம் என்பது எனது அபிப்பிராயம். அரசாங்க உத்தி யோகஸ்தர்கள் கொடுக்கும் கஷ்டமானது ஏழை விவசாயிகளை மிகவும் கஷ்டப்படுத்தும் என்று இந்த பட்ஜெட்டில் சொல்லிக் கொள்கிறேன். இவைகளையெல்லாம் யோசித்து அரசாங்கம் முடிவுக்கு வரவேண்டும். நல்ல முறையில் பல நல்ல திட்டங்களையும், அபிவிருத்தித் திட்டங்களையும் கொண்டு வந்திருப்பதைப் பாராட்டி அதை நான் வரவேற்கிறேன்.

*SRI V. SUBBIAH : கனம் உதவி சபாநாயகர் அவர் களே, இன்றைய 1958–59-ம் வருஷத்திய வரவு செலவுத் திட்டத்தைப் பாராட்டுதற்குரிய முறையில் ஒன்றுமில்லாவிட்டாலும், இன்றைய பட்ஜெட் டைத் தயாரித்தவர்கள் விவசாயிகளுடைய நிலையை உணர்ந்தோ, அல்லது சட்ட மன்றத்தில் விவசாய அங்கத்தினர்கள் இருக்கிறார்கள் என்ற எண் ணத்துடனே தயாரிக்காத நிலையில், இன்றைய தினம் அவர்கள் விவசாய வருமான வரி என்ற ஒரு வரியை விதித்திருக்கிறார்கள். இந்த நாட்டிலே இருக்கிற அரசாங்கம் விவசாயிகள் உற்பத்தி செய்யும் பொருள்களுக்கு விற்பனை ஆவதற்கு வசதி செய்து கொடுக்க முடியாத நிலையில், விவ சாயிகளுக்குப் பாதுகாப்பளிக்க முடியாத நிலையில், விவசாயிகள் நலனை கவனிக்க முடியாத அரசாங்கம் வரி விதிக்க உரிமை இருக்கிறதா என்று சந்தேகப்படக்கூடிய நிலையில் இருக்கும் சமயத்தில் இந்த வரி விதிக்கப் பட்டிருக்கிறது. ஒன்றரை ஏக்கர் நிலம் வைத்திருக்கும் தோட்ட விவசாயி, வேறு எந்தத் தொழிலும் இல்லாத ஒரு விவசாயி 3,000 ரூபாய் வருமானம் அடைய முடியுமென்றால் அவனும் இந்த வரியைக் கட்ட வேண்டிய நிலை வருகிறது. இந்த $1\frac{1}{2}$ ஏக்கர் தவிர வேறு சொத்தோ தொழிலோ இல்லாத ஒருவன் 3,000 ரூபாய் வருமானம் அடைந்தால் அவன் வரி கட்டவேண்டும். அந்தத் தோட்டத்திலே மிளகாய்ச் செடி வைத்து 15 பொதி உற்பத்தி செய்கிறான் என்றால், மார்க்கெட்டில் விலை பொதி 200 ரூபாய் என்றால் அவனுக்கு 3,000 ரூபாய் வந்து விடுகிறது. அவனும் வரி கட்டவேண்டும். அவன் குடும்பம் என்ன, அவன் விவசாயம் செய்து உற்பத்தி செய்ய என்ன செலவாகிறது என்று பார்க்க வேண்டும். அவன் குறைந்த பட்சம் ஏக்கருக்கு 400 ரூபாய் செலவு செய்ய வேண்டி யிருக்கிறது. தோட்டத்திலே செடிகள் நோய் இல்லாத நிலை இருந்து, நல்ல நிலையிலே மாசூல் கிடைத்தால் 15 பொதி கிடைத்தால், 3,000 ரூபாய் கிடைக்கும். அவன் செலவு செய்வதையும், அவனுக்கு வரும்

4th March 1958] [Sri V. Subbiah]

வருமானத்தையும் பார்த்தால் இந்த வரி ஒரு பெரும் பாரமாக இருந்து அவனுக்கு மிகவும் கஷ்டத்தை உண்டாக்கும் என்று இங்கே வலியுறுத்திச் சொல்ல விரும்புகிறேன்.

அடுத்தபடியாக டீசல் போன்ற எண்ணெய்களுக்கு 35 நயா பைசாவாக வரியை உயர்த்துவது முழுக்க முழுக்க விவசாயிகளை பாதிக்கிறது. விவசாயிகளுக்கு அந்த வரியிலிருந்து விலக்களிக்க வேண்டும். பம்ப் செட்டுகளை ஓட்டுவதற்கு டீஸல் உபயோகிக்கிறார்கள். அது மட்டுமல்ல. இன்றைக்கு அரசாங்கம் எத்தனை வரிகளைப் போடுகிறதோ, அவைகள் எல்லாம் விவசாயிகளை மறை முகமாக பாதிக்கிறது. இந்த விற்பனை வரியால் 100-க்கு 80 சத விகிதம் உள்ள கிராமத்திலுள்ள விவசாயிகள் பாதிக்கப்படுகிறார்கள். புதிய வரியை சென்ற கூட்டத்தில் தோட்டக்காரர்களுக்குப் போட்டார்கள். அதை அப்போது வரவேற்றோம். இப்போது இந்த வரியைப் போட்டால் மிகவும் கஷ்ட நிலையில் உள்ளவர்கள் பாடுபட்டுப் பலனை அடைய முடியாத நிலை ஏற்படும். அது மிகவும் வருந்தத்தக்க விஷயம். அந்த நிலையில் பட்ஜெட் தயாரிக்கப்பட்டிருக்கிறது. இன்றைக்கு அரசாங்கத்திலே விவசாயிகளுக்கு எல்லா முறையிலும் கடன்கள் கொடுக்கப்பட்டு வருகின்றன என்று சொல்கிறார்கள். உரம் கொடுக்கப்படுகிறது. சென்ற வருஷத்தை விட இந்த வருஷம் 1 கோடி ரூபாய் ஜாஸ்தியாகக் கொடுக்கப்படும் என்று சொல்லுகிறோம். ஒரு கோடி ரூபாயில் விவசாயிகளுக்கு எவ்வளவு நேரடியாகப் போகிறது என்று பலர் பேசினார்கள். அதை நாம் சிந்தித்துப் பார்க்கவேண்டும். அதுமட்டுமல்ல. பாசன வசதிகளுக்காகவே ஒரு கோடி சொச்சம் ரூபாய் ஒதுக்கப்பட்டிருக்கிறது. சிறு பாசன திட்டங்களுக்காக 70 லட்சம் ஒதுக்கப்பட்டிருக்கிறது. அதுமட்டுமல்ல. உரங்கள் கொடுக்கிறோம் என்று சொல்கிறார்கள். இன்னும் எத்தனையோ உதவிகளை அரசாங்கம் விவசாயிகளுக்குச் செய்கிறது. அப்படியிருந்தும் கூட விவசாயிகளுடைய பொருளாதார நிலைமை கொஞ்சங்கூட உயரவில்லை. காரணம் விவசாயிகள் உற்பத்தி செய்யக்கூடிய பொருள்களுக்கு விலை நிர்ணயம் செய்யாததுதான். அவர்களுடைய பொருள்களுக்கு ஏன் விலை நிர்ணயம் செய்யக்கூடாது ? அரசாங்கம் இன்றைய தினம் வேறு பல தொழில் துறையில் விலை நிர்ணயம் செய்திருக்கிறார்கள். இன்றைய தினம் பல பெரிய மில்களுக்கு வேண்டிய பஞ்சு வெளி நாடுகளில் இருந்து—அரேபியாவில் இருந்து, கலிபோர்னியாவில் இருந்து, ஈஜிப்டில் இருந்து, பாகிஸ்தானிலிருந்து கூட—இங்கே வந்து கொண்டிருக்கிறது. அதே சமயத்தில் மில்களில் உற்பத்தி செய்யக்கூடிய நூல்களுக்கு விலை நிர்ணயம் செய்திருக்கிறார்கள். அதே சமயத்தில் நூல் உற்பத்திக்கு மிகவும் அவசியமான பருத்திக்கு—விவசாயப் பொருளாகிய பருத்திக்கு விலை நிர்ணயம் செய்யப்படவில்லை. தாம்பிரபரணி நீர்ப்பாசனத்தை எடுத்துக்கொண்டால் 112 படியுள்ள ஒரு கோட்டை நெல் இன்றைய தினம் 29 ரூபாய், 30 ரூபாய் என்று விலை விழுந்துவிட்டது. விவசாயிகளுடைய உற்பத்திச் செலவு என்ன ? பொருளாதார நிலைமை என்ன ? இந்த நிலைமையில் விவசாயம் செய்வதில் அவர்களுக்கு என்ன கட்டுபடியாகும் என்பதைச் சிந்தித்துப் பார்க்கவேண்டும். கால்நடைகளுக்கு இன்ஷூரன்ஸ் இருக்கிறதா ? இன்றைக்கு விவசாயி ஒரு ஜோடி மாடு வாங்கவேண்டுமென்றாலும் 800 ரூபாய் முதல் 1,000 வரையில் செலவழிக்க வேண்டியிருக்கிறது. ஒரு மாடு இறந்துவிட்டால் திரும்ப அவனால் உடனே வாங்கமுடியுமா ? அப்படி மாடு இறந்துவிட்டால் அவர்களுக்கு அரசாங்கமாவது உதவி செய்கிறதா என்பதை எல்லாம் மனதில் வைத்துப் பார்க்க வேண்டும். பெரிய பெரிய நீர்ப்பாசன திட்டங்கள் எல்லாம் போடுவதாகச் சொல்கிறார்கள். எங்களுடைய பகுதி மிகவும் பிற்போக்கான பிரதேசம். திருநெல்வேலி ஜில்லாவில் சங்கரன்கோயில் தாலுக்கா மிகவும் பிற்போக்கான நிலைமையில் இருக்கிறது. அந்தப் பிராந்தியத்தில் பல ஆண்டுகளாக பெரிய பாசன திட்டங்களை அமைப்பதற்கு வேண்டிய நடவடிக்கையை எடுக்கவேண்டுமென்று பிரதிநிதிகள் சொல்லிக்கொண்டு வருகிறார்கள். அரசாங்கமும் எடுப்பதாகச் சொல்லிக்கொண்டு வருகிறார்கள். ஆனால் இன்றைய தினம் வரையில் என்ன நடந்திருக்கிறது ? இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்திலே கீரியாறு, பொம்மையாறு போன்ற பல திட்டங்கள் சேர்க்கப்படும் என்று எண்ணிக்கொண்டிருந்தோம்.

5-50 p.m.

பரம்பிக்குளம் திட்டம் பற்றி பேசப்பட்டது. கேரள சர்க்காருடன் சீக்கிரத்தி லேயே ஒரு உடன்பாட்டுக்கு வரமுடியும் என்று சொன்னார்கள். மேலே ஒன்றையும் காணோம். பேச்சளவிலாவது பரம்பிக்குளத் திட்டம் இருக் கிறதே தவிர மற்ற ஆறுகளைப் பற்றி அதுகூட இல்லை. காரியத்தில் விவசாயிகளுக்கு நன்மை செய்ய துரிதமாக நடவடிக்கை எடுக்காத வரையில் கடன் உதவி அளிக்கிறோம், உரம் கொடுக்கிறோம், விதை கொடுக் கிறோம் என்பதனால் விவசாயிகளுடைய நிலைமை உயர்ந்துவிடாது. சுதந் தரம் கிடைத்து பத்து ஆண்டுகள் ஆனபோதிலும் கூட விவசாயிகள் முன்னேறாமல் இருப்பதைக் கொண்டே அதை நன்கு உணர்ந்து கொள்ளலாம்.

அடுத்தபடியாக, விவசாயத்திலேயே மிகவும் கடினமான விவசாயம் இன்றைக்கு நாட்டிலே நடை பெறுகிற கொடிக்கால் விவசாயம் என்கிற வெற்றிலை விவசாயம். பருவ நிலை காரணமாக கொடிக்கால் விவசாயத் தில் அடிக்கடி நோய்கள் வந்து கொண்டிருக்கின்றன. சாகுபடியாளர் பாதுகாப்பு சட்டத்தினால் கொடிக்கால் விவசாயிகள் பெரிதும் பாதிக்கப் படுகிறார்கள். அதனால் இரண்டு ஆண்டுகளாக கோவை, திருநெல்வேலி, மதுரை, திருச்சி போன்ற இடங்களில் அவர்களில் சுமார் 10,000 பேர் வேலையில்லாமல் கூடக் கஷ்டப்படுகிறார்கள். அவர்களுடைய நிலைமையைக் கவனித்து கொடிக்கால் பயிர்கள் சேதம் அடையாமல் தக்க பாதுகாப்பு செய்வதற்கும், அவர்களுக்கு சட்டப்படி நிலம் கிடைக்கவும் பயிர் செய்வ தற்கும் வேண்டிய வசதியைக் கொடுப்பதற்கும் நாம் கடமைப்பட்டிருக்கி றோம். மேலும் இன்றைய தினம் விவசாயப் பொருள்களை நேரிடையாக வெளிநாட்டுக்கு ஏற்றுமதி செய்ய வழியின்றி கூட்டுறவு ஸ்தாபனத்தின் மூலமாக அனுப்பவேண்டியிருப்பதால் எத்தனை நஷ்டங்கள் ஏற்படுகின்றன என்று சொல்ல முடியாது. சிலோனுக்கு அனுப்புவதைப் பார்த்தாலே தெரியும். விவசாயிகளோடு தொடர்புள்ள மார்க்கெட்டிங் சொஸைடிகள் இருக்கும்போது மத்திய கூட்டுறவு ஸ்தாபனத்தின் மூலம் ஏற்றுமதி செய்ய அனுமதித்து அவர்கள் மூலம் விவசாயிகளுக்குக் கொடுக்கிறார்கள். தூத்துக்குடி துறைமுகத்திலே சமீபத்தில் ஆயிரக்கணக்கான வெங் காய மூட்டைகள் அழுகிப் போய் இருக்கின்றன. விவசாயிகளுக்கு நேரிடை ஏற்றுமதி வசதி இல்லாத காரணத்தினால் இவ்வளவு நஷ்டத்திற்கும் அவர்கள் உள்ளாக வேண்டியிருக்கிறது. இதையெல்லாம் அரசாங்கம் கவனிப்பது இல்லை. இப்படி எவ்வளவோ சொல்லிக் கொண்டு போகலாம். இப்படிப்பட்ட பலவிதமான சூழ்நிலைகள் இருப்பதன் காரணமாக, ஊழல் கள் இருப்பதன் காரணமாக விவசாயிகளுக்கு சர்க்கார் பலவிதமான நல்ல காரியங்களைச் செய்வதாகச் சொன்னாலுங் கூட, நல்ல நல்ல திட்டங்களைத் தீட்டினாலுங்கூட, அவை எல்லாம் நடைமுறைக்கு வரும் போது விவசாயிகளைப் பெரிதும் பாதிக்கும் வகையிலே அமைகிறது என்று சொல்லி என்னுடைய உரையை முடித்துக் கொள்கிறேன்.

* **Sri S. RAMALINGA PADAYACHI** : கனம் உதவி சபாநாயகர் அவர்களே, நமது நிதி அமைச்சர் அவர்கள் சமர்ப்பித்திருக்கும் வரவு செலவுத் திட்டத்தை ஆதரித்து நான் சில வார்த்தைகள் சொல்ல விரும்பு கிறேன். நமது மாநிலத்தில் பருவ நிலை சிற்சில இடங்களில் சுமாராக இருக்கிறது என்று சொன்னார்கள். திருச்சி ஜில்லாவில் இந்த வருஷம் பருவ நிலை நன்றாக இருக்கவில்லை. அதனால் அநேக இடங்களில் பயிர்கள் மோசமாகப் போய் இருக்கின்றன. நஞ்சைப் பயிர்கள், புஞ்சைப் பயிர்கள் எல்லாம் சேதமடைந்திருக்கின்றன. தண்ணீர் தட்டுப்பாடு ஏற்பட்டிருக்கிறது. அந்த அந்த இடங்களுக்காவது அமைச்சர் அவர்கள் நேரிடையாகச் சென்று பார்த்த பிறகாவது கிஸ்தி வஜா செய்ய வேண்டும் என்பதாகக் கேட்டுக் கொள்கிறேன். அதோடு சென்ற ஆண்டு நியாயவிலைக் கடைகளை ஏற் படுத்தியதைப் போலவே இவ்வாண்டும் நியாயவிலைக் கடைகளை ஏற்படுத்தி ஏழைகளைக் காப்பாற்றவேண்டுமென்று சொல்லிக் கொள்ள ஆசைப்படுகி றேன். விவசாயிகளுடைய நிலைமை முன்னேறி வருகிறதாக நிதி அமைச்சர் அவர்கள் சொல்லியிருக்கிறார். அதைப்பற்றி நான் பெருமைப் படுகிறேன். விவசாயம் அதிகமாக வளர்ச்சி அடைந்தால் தான் நம் நாட்டு மக்களுக்கு நன்மை ஏற்படும். அதோடு விவசாய காலத்தில்

4th March 1958] [Sri S. Ramalinga Padayachi]

விவசாயிகளுக்குத் தேவையான விதைகள், உரங்கள் முதலியவற்றை விநியோகம் செய்ய தக்க ஏற்பாடு செய்ய வேண்டும். பயிர்ச் செலவு செய்கிற காலத்தில் விதை இல்லை என்று சொன்னால் நன்மை இல்லை. மேலும் நீர்ப்பாசன வசதியை எடுத்துக் கொண்டால் பெருவாரியாக பெரிய திட்டங்கள் எல்லாம் நம் மாநிலத்தில் முடிந்துவிட்டாலும் இன்னும் அநேக சிறிய பாசன திட்டங்களில் கவனம் செலுத்தலாம். பழைய காலத்தில் வெட்டப்பட்ட ஏரிகள், குளங்கள் எல்லாம் நல்ல கண்காணிப்பு இல்லாமல், மழைக்காலத்தில் தண்ணீரைத் தேக்கி வைத்துக்கொள்வதற்கு வசதி இல்லாமல் இருந்து கொண்டிருக்கின்றன. முன்பு மூன்று பயிருக்கு வேண்டிய தண்ணீர் பிடிக்கும் ஏரிகள் ஒரு முறை விவசாயத்திற்குக் கூடத் தண்ணீர் பிடிக்க முடியாமல் இருக்கிறது. அதனால் பயிர்கள் சாவியாகப் போகின்றன. அந்த ஏரிகள், குளங்கள் இவற்றைச் செப்பனிட்டு கரைகளை சரிப்படுத்தி உயர்த்தினால் மிகவும் நன்றாக இருக்கும். இதைச் சர்க்கார் கவனிக்கவேண்டும்.

6 p.m.

கால்நடை பராமரிப்புப்பற்றி குறிப் பிடப்பட்டிருக்கிறது. அது ஒரு நல்ல அறிகுறிதான். இன்னும் அதை நல்ல முறையில் பராமரிக்க வேண்டுமானால் அதிகப்படியான பொலி காளைகளை வாங்கிக் கொடுக்கும் படியாகக் கேட்டுக்கொள்ளுகிறேன். நாலைந்து மைல் தூரத்திற்கு ஒரு பொலி காளையையாவது வாங்கி மானியமாகக் கொடுக்க வேண்டும் என்று கேட்டுக் கொள்ளுகிறேன். அதன் மூலம் அங்குள்ள விவசாயிகள் நல்ல ரக மாடுகளை உற்பத்தி செய்துகொள்வதற்கு வசதியாக இருக்கும். ஒவ்வொரு கிராமத்திற்குக் கொடுக்காவிட்டாலும் மூன்று அல்லது நாலைந்து கிராமங்களுக்குச் சேர்த்துக் கொடுத்தாலும் கொடுக்கலாம். ஆகவே கால்நடைகளை அபிவிருத்தி செய்வதற்கு பொலி காளைகளை வாங்கிக் கொடுக்கும் படியாகக் கேட்டுக்கொள்ளுகிறேன்.

ஆனால் இப்பொழுது உள்ள நிலை என்னவென்றால் ஒரு மாட்டை பத்து மைல் தூரம் வரையில் கூட ஓட்டிச் செல்ல வேண்டியதாக இருக்கிறது. ஆகவே சமீபத்திலேயே ஒரு பொலி காளையை அமைத்துக் கொடுக்க ஏற்பாடு செய்யும்படியாகக் கேட்டுக்கொள்ளுகிறேன்.

கால்நடை ஆஸ்பத்திரி இப்பொழுது அநேகமாக இல்லை. சுமார் பத்து அல்லது பதினைந்து மைல் தூரத்திற்குச் செல்ல வேண்டியதாக இருக்கிறது. ஒவ்வொரு தாலுகா ஹெட்குவார்ட்டர் ஆஸ்பத்திரியிலும் ஒரு மிருக ஆஸ்பத்திரி உள்ளது. நாலைந்து மைலுக்கு ஒரு ஆஸ்பத்திரியை அமைத்துக் கொடுக்க வேண்டும் என்று கேட்டுக் கொள்ளுகிறேன்.

**DEPUTY SPEAKER**: இன்னும் இரண்டு நிமிஷங்களில் முடித்து விடுங்கள்.

**Sri S. RAMALINGA PADAYACHI**: அநேகக் கிராமங்களில் இப்படிப்பட்ட ஆஸ்பத்திரிகள் இல்லாமல் அங்குள்ள கால்நடைகள் கஷ்டப் பட்டுக்கொண்டிருக்கின்றன. ஆகவே நாலைந்து மைலுக்கு ஒன்றாகிலும் அப்படிப்பட்ட ஆஸ்பத்திரியை அமைத்துக்கொடுக்க வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். கால்நடை பராமரிப்பு சம்பந்தமாக இதைக் குறிப்பிட நான் ஆசைப்படுகிறேன்.

இப்பொழுது கிராமங்களில் கூட்டுறவு சங்கங்கள் நல்ல முறையில் இயங்கி வருகின்றன. கூட்டுறவு சங்கங்களை அங்கங்கே ஏற்படுத்தி அதனால் மக்களுக்கு நல்ல முறையில் கடன் கொடுத்து உதவி வருகிறார்கள். அதைப் போலவே இன்னும் அதிகப்படியான கூட்டுறவு சங்கங்களை அமைத்துக்கொடுத்து நல்ல முறையில் விவசாயிகளுக்கு கடன் கொடுத்து உதவ வேண்டும். இப்பொழுதுள்ள கூட்டுறவு சங்கங்கள் வெற்றி அடைந்து வந்தாலும் இன்னும் கூட்டுறவு சங்கங்களை அதிகப்படுத்தி அதனால் மக்களுக்கு கிராமங்களில் கடன் கிடைக்க வசதி செய்து கொடுக்கும்படியாக

[Sri S. Ramalinga Padayachi] [4th March 1958

நான் கேட்டுக்கொள்ளுகிறேன். விவசாயிகள் முதலாளிகளிடம் கடன் வாங்கி கஷ்டப்படாமல் கூட்டுறவு சங்கங்கள் மூலமாகவே கடன் வாங்கிக் கொள்ள வசதி செய்து கொடுக்க வேண்டும். அப்படி அமைத்துக்கொடுத்தால் விவசாயிகள் நல்ல முறையில் தாங்கள் வாங்கிய கடனை திருப்பிக் கொடுப்பதற்கு வாய்ப்பு இருக்கிறது. ஆகையால் கூட்டுறவு சங்கங்களை அங்கங்கே ஏற்படுத்திக் கொடுக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

**DEPUTY SPEAKER** : **The House will now adjourn and meet again at 1 p.m. tomorrow.**

6-03 p.m. **The House then adjourned.**

